வானதி பதிப்பகம்







# இந்துமதச் சிந்தனைகள்

பி. சி. கணேசன்

# இந்து மதச் சிந்தனைகள்

பி. சி. கணேசன்



வானதி பதிப்பகம்

தி. நகர் · சென்னை-17

இந்து மதம் ஒரு பல்கலைக் கழகம். எத்தனையோ விதமான சிந்தனைகளுக்கும் இதில் இடமிருந்திருக்கிறது. இவற்றுள் எது சரி, எது தவறு அல்லது எது முக்கியமானது, எது முக்கியம் அல்லாதது என்கிற வாதத்திற்கு இடமில்லை.

பல்கலைக் கழக அமைப்பில் விஞ்ஞானமும் உண்டு; வரலாறும் கணிதமும் உண்டு; தத்துவமும் உண்டு; இன்னும் எத்தனையோ துறைகள் உண்டு. அது போன்றதுதான் இந்து மதமும், இங்கே பல்வேறு வகைச் சிந்தனை அமைப்புகள் உண்டு.

அனைத்துமே பிரபஞ்ச ரகசியத்தையும் வாழ்க்கை நோக்கையும் ஆராய்கின்றவை. இந்த ஆராய்ச்சிகள் ஒரு குறிப்பிட்ட நியதிக்குள்ளோ எல்லைக்குள்ளோ அடங்குவது சாத்தியமில்லை. அனைத்துச் சிந்தனைகளும் உண்மைகளைக் கண்டறிய முயல்கின்றன.

பி. சி. கணேசன

# பொருளடக்கம்

# இந்து மதச் சிந்தனைகள்

## 1. அறிமுகம்

இந்து மதத்தின் விழுமிய சிந்தனைகள் உபநிஷதங்களில் பெருமளவில் உள்ளன. உபநிஷதக் கட்டுரைகள் அனைத்தும், இன்றைக்கு மனவியல் என்று நாம் எதைக் குறிப்பிடுகிறோமோ அவற்றை அடிப்படையாகக்கொண்டு சொல்லப்பட்டவைகளே. பழங்கால ரிஷிகளும் முனிவர்களும் தாங்கள் உணர்ந்தவைகளை முறைப்படுத்தி, உபநிஷதப் பேருரை ஆக்கினார்கள். அவைகளைக் கவிதை அழகோடு சொன்னார்கள். உபநிஷதங்களில் காணப்படும் சிந்தனைகள் முடிவானவை என்று அவற்றை இயற்றிய ஆசிரியர்களும் சொல்லவில்லை. சிந்திக்கத் தூண்டினார்கள். சிந்திப்பது அவசியம் என்றார்கள். சிந்திக்காமல் உண்மை புலப்படாது என்றார்கள். சிந்திக்கிறவர்கள் மட்டுமே உண்மையைக் காணமுடியும் என்றார்கள். இப்படி அவர்கள் சொன்னதை வைத்துப் பார்த்தால் உபநிஷதக் காலத்தில் சிந்தனைச் சுதந்திரம் பரிபூரணமாக இருந்தது என்பதை உணரமுடியும்.

ஆகவே, உபநிஷதங்களில் முரண்பாடுகள் இருந்தன. ஒன்றுக்கொன்று மாறுபட்ட கருத்துகள் இருந்

தன. இதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. காரணம், தெளிவானது. சிந்தனைச் சுதந்திரம் இருக்கிற இடத்தில் முரண்பாடுகளும் இருக்கவே செய்யும். உபநிஷத காலச் சிந்தனையாளர்கள் முரண்பாடுகளை வாழ்க்கையின் ஒரு நியதியாகவே ஏற்றுக் கொண்டார்கள்.

உபநிஷத காலப் பெரியவர்களின் நோக்கம் உண்மையைக் கண்டறிவதாக இருந்தது. அதாவது, பிரபஞ்ச ரகசியத்தை அறிய அவர்கள் முயன்றார்கள்.

இந்தப் பிரபஞ்சம் என்பது என்ன? அது ஏன் உண்டாயிற்று? எப்படி உண்டானது? எப்போது உண்டானது? அதை உண்டாக்கியவர்கள் யாராவது இருக்கிறார்களா? இருக்கிறார்கள் என்றால் அவர்களை உண்டாக்கியது யார்?

மனிதன் என்பவன் யார்? அவனுடைய பிறப்பிற்கு ஏதாவது நோக்கம் இருக்கிறதா? அவனுக்கும் பிரபஞ்ச இயக்கத்திற்கும் உள்ள தொடர்பு என்ன? மரணத்திற்குப் பின் மனிதன் என்னவாகிறான்? உயிர் என்பது என்ன? உயிருக்கும் உடலுக்கும் என்ன தொடர்பு?

இவ்வாறு பிரபஞ்சம் பற்றியும், பிரபஞ்சத்திற்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு பற்றியும் ஆராய்ந்து அறிய உபநிஷத ஆசிரியர்கள் முயன்றார்கள். இந்த முயற்சியில் ஈடுபட்டவர்கள் வேதங்களில் சொல்லப்பட்ட கருத்துகளை அப்படியே ஏற்றுக்கொள்ளவில்லை. உபநிஷதங்களை இயற்றிய சிலர் வெளிப்படையாகவே நாஸ்திகர்களாகவும் இருந்தார்கள். சில கொள்கைகளுக்குக் கட்டுப்பட்டு வாழ்க்கையை அமைத்துக்கொள்ளுவதை அவர்களுள் பலர் ஏற்றுக் கொள்ளவில்லை.

இந்து மதம் என்பது ஒரு மதமாகச் சில கோட்பாடு களின் அடிப்படையில் தோற்றுவிக்கப்படவில்லை. சமூக இயல் பற்றிச் சில சிந்தனையாளர்கள் சொல்லிய கருத்துகள் காலப்போக்கில் மாற்றமடைந்தும் வளர்ச்சியடைந்தும், பின்னர் வந்த சிலரால் மதம் என்று அழைக்கப்பட்டுப் பிற்கால வரலாற்று ஆசிரியர் களால் 'இந்து மதம்' என்கிற ஒன்ருக ஒப்புக்கொள்ளப் பட்டது.

வேதங்கள், உபநிஷதங்கள் ஆகியவற்றின் அடிப் படையில் பல்வேறு கருத்துகளும் மலர்ச்சியடைந்தன. காலங்காலமாகப் பல்வேறு ஆராய்ச்சியாளர்களும் சிந்தனையாளர்களும் இந்து மதத்திற்கு விளக்கமும் வியாக்கியானமும் சொல்லி, இதன் வளர்ச்சிக்கு அரும் பாடு பட்டிருக்கிருர்கள். இவைகளைப்பற்றியெல்லாம் அறிந்துகொள்ளுவதற்கு முன்னதாகப் பல்வேறு சிந்தனையாளர்களின் கோட்பாடுகளை இந்து மதம் என்னும் அமைப்பு எவ்வாறு பெற்றது என்கிற வரலாற்று உண்மைகளையும் தெரிந்துகொள்ளுவது உபயோகமாக இருக்கும்.

## 2. இந்து மதம் உருவான கதை

இந்தியாவின் பூர்விக குடிகள் யார் என்பதைப் பற்றிச் சரித்திர ஆசிரியர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிறைய இருக்கலாம். ஆனால், இந்தியாவில் பழங்குடி மக்கள் இருந்தார்கள் என்பதும், வேறு பல இன மக்கள் இந்தியாவிற்குள் வந்து குடியேறி இங்குள்ள மக்களோடு இரண்டறக் கலந்து போனார்கள் என்பதும் வரலாற்று உண்மைகளாகும். இந்தியாவின் பூர்விகக் குடிகள் திராவிடர் என அழைக்கப்பட்டார்கள் என்பதும், குடியேறியவர்கள் ஆரியர்கள் என அழைக்கப்பட்டார்கள் என்பதும் சில வரலாற்று உண்மைகளாகும். ஆரியர்கள் நாடோடி இனமாய் வாழ்ந்தார்கள். ஆதலால், திராவிடர்களைப்போலக் கட்டடக் கலையிலோ கோட்டை கொத்தளங்களைக் கட்டுவதிலோ அவர்கள் வல்லவர்களாய் இருக்கவில்லை. எனவே, குடியேற வந்தவர்கள் ஏற்கனவே குடிகளாக வாழ்ந்தவர்களை வெல்லுவதில் பெரிய போராட்டங்கள் நடத்த வேண்டியிருந்தது.

வேதங்களுக்கும் உபநிஷதங்களுக்கும் இடையில் தோன்றிய மோதல்கள்கூட இந்த இருவேறு இனங்களின் சிந்தனைகளின் விளைவாகத் தோன்றிய மோதல்

என்பதில் சந்தேகமில்லை. இந்த இரண்டு இனங்களும் வெவ்வேறு வழிபாட்டு முறைகளைக் கொண்டிருந்தன.

ஆரியாகள் இயற்கையை வழிபட்டார்கள். இயற்கையைக் கட்டுப்படுத்தும் இந்திரனையும், மழையைக் கட்டுப்படுத்தும் வருணனையும் அவர்கள் கடவுள்களாக வழிபட்டார்கள். பாடல்கள் அல்லது ஸ்லோகங்கள் மூலம் பிரார்த்தனை செய்வதும், பேரானந்தம் தரும் பானங்களைப் பருகுவதும் அவர்களுக்கு வழக்கமாக இருந்தது. சோம பானம் என்கிற போதை திரவத்தை அவர்கள் அருந்தினர்கள்.

திராவிடர்கள் உருவ வழிபாடு செய்தார்கள். லிங்கம் போன்ற சிலைகளை வழிபட்டார்கள். இதன் விரிவான விளக்கங்களைப் பின்னர் பார்க்கலாம். யோகப் பயிற்சி திராவிடர்களின் மத அனுஷ்டானங்களுள் ஒன்ருக இருந்தது.

ஆரம்ப காலத்தில் ஆரியர்களுக்கென்று தனியான மத குருமார்கள் இருக்கவில்லை. குடும்பத் தலைவனே குடும்பத்திற்கான பிரார்த்தனையும் வழிபாடும் செய்தான். திரும்பத்திரும்ப அவன் சொன்ன வேண்டுதல், மந்திரம் என்று அழைக்கப்பட்டது. இந்த மந்திரங்களுக்கு நன்மை உண்டாக்கும் சக்தி இருப்பதாகக் கருதப்பட்டது. இவைகளின் தொகுப்பே பிற்காலத்தில் ‘ரிக் வேதம்’ என்று அழைக்கப்பட்டது.

இந்துக்கள் இப்போதும் ரிக் வேதத்தைப் பெரிதும் மதிக்கிருர்கள். ஆனுல், ரிக் வேத ஸ்லோகங்கள் இன்றைய கால கட்டத்திற்குப் பொருத்தமானவைகளாக இருப்பதற்கு வழியில்லை.

ஆரியர்கள் நாடோடிகளாக வாழ்ந்ததால், அவர்களுக்கு விவசாயத் தொழில் செய்து நிலையான வாழ்க்கை நடத்திய திராவிடர்களிடம் அச்சமிருந்தது. ஆரியர்களின் மத குருமார்கள் பிராமணர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். 'இருபிறப்பாளர்கள்' என்னும் அடைமொழியும் அவர்களுக்கு இருந்தது. தாயிடமிருந்து அவர்கள் பிறந்தது ஒரு பிறப்பு. காயத்திரி மந்திரம் சொல்லிக் கொடுக்கப்பட்டு உபநயனம் செய்விக்கப்படும் போது அவர்கள் இன்னொரு பிறப்பு எடுப்பதாகக் கருதப்பட்டது. இம்மாதிரி பூணூல் அணிந்த பிராமணர்கள் சமூகத்திற்காக வழிபாடு செய்யும் உரிமை பெற்றவர்களாக இருந்தார்கள்.

இவர்களுக்குச் சமூகத்தில் நிறைய செல்வாக்கு இருந்தது. இந்தச் செல்வாக்கு காலப்போக்கில் மேல் குடி மக்களாக அவர்களை ஆக்கிற்று. இவர்கள் மன்னர்களினும் மேலான சக்தி படைத்தவர்களாக விளங்குகிறார்கள். மன்னன், தெய்வங்களின் அங்கீகாரத்தோடு ஆட்சி செய்தான். தெய்வங்களின் அங்கீகாரத்தைப் பெற்றுத் தரும் ஆற்றல் படைத்தவர்களாக பிராமண குருக்கள் விளங்கினார்கள். மன்னர்களைப் பதவியில் அமர்த்தவும், பதவியிலிருந்து வெளியேற்றவும் சக்தி படைத்தவர்களாக குருமார்கள் விளங்கினார்கள்.

மேலாதிக்கம் பெற்றுவிட்டவர்கள் அதைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்காக நான்கு வருணங்களைப் படைத்தார்கள். இந்த நான்கு வருணங்களில் பிராமணர்கள் முதல் வரிசையிலிருந்தார்கள். தெய்வ வழிபாடு செய்வதும், தெய்வத்தின் அனுக்கிரகத்தைச் சமூக நலனுக்குப் பெற்றுத் தருவதும் இவர்களின்

வேலையாக இருந்தது. இவர்கள் வேறு பணிகளைக் கவனிக்காததால் இவர்களுக்குத் தேவையான உணவு உடை, வசிக்கும இடம் ஆகியவற்றை அளிப்பது இதர, வருணங்களின் கடமையாயிற்று.

இவர்களுக்கு அடுத்த வரிசையிலிருந்தவர்கள் க்ஷத்திரியர்கள். மன்னர்களும் போர் வீரர்களும் இந்த வரிசைக்குரியவராக இருந்தார்கள். நாட்டைப் பாது காப்பது இவர்களின் கடமையாக இருந்தது. மேற் கத்திய நாடுகளில் பிரபுக்கள் என்ன அந்தஸ்திலிருந் தார்களோ அந்த அந்தஸ்தில் க்ஷத்திரியர்கள் இருந்த தாகக் கருதலாம்.

அடுத்த வரிசையில் இருந்தவர்கள் வைசியர்கள் என்று வழங்கப்பட்டார்கள். இவர்கள் விவசாயம், வர்த்தகம் ஆகிய துறைகளைக் கவனித்துக்கொண் டார்கள். சமூகத்தில் பொருளாதார இயக்கம் இவர் களின் பிடியில் இருந்ததாகச் சொல்லலாம்.

நான்காவது கீழ்த்தட்டு வரிசையிலிருந்தவர்கள், தொழிலாளி வர்க்கத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் சூத்திரர்கள் என்று வழங்கப்பட்டார்கள். திட்டமிட்ட இந்து சமூக அமைப்பு உருவான போது, இந்தியாவில் பூர்விகக் குடிகள் உடல் உழைப்பைத் தரும் தொழிலாளி வர்க்கமாக மாற்றம் பெற்றுச் சூத்திரர்கள் வரிசையில் இடம் பெற்றுர்கள்.

இந்த அமைப்புகள் எந்த அளவுக்குச் சமூகத் தேவைகளைப் பூர்த்தி செய்தன என்பது பற்றி வரலாற்று ஆசிரியர்களுக்குள்ளே நிறைய கருத்து வேறுபாடுகள் உண்டு. ஆனுல், வெறும் பழக்கவழக்கங் களாக இருந்தவை, ஒரு மதம் என்று சொல்லத்தக்க

அமைப்பு முறையைப் பெறுவதற்கு இந்த வருணப் பாகுபாடு அடித்தளமாக அமைந்தது என்பதை மறுப் பதற்கில்லை.

இந்த நான்கு வருணங்களும் ஒன்றுக்கொன்று திருமணத் தொடர்புகள் வைத்துக்கொள்ளுவது தடுக் கப்பட்ட விஷயமாக இருந்தது. காலப்போக்கில் உடல் உழைப்புத் தொழிலைச் செய்து வந்தவர்கள் உரிமை கோராமல் இருக்க வேண்டும் என்பதற்காக அவர்களைத் தீண்டத்தகாதவர்களாக ஒதுக்கி வைக்கும் பழக்கமும் இந்து சமூக அமைப்பில் நுழைந்து நிலைத்துப் போயிற்று.

இந்தியாவில் இந்துக்களிடையே உருவான இந்தச் சமூக அமைப்பு முறை, உலகில் வேறு எந்தச் சமுதாயத் திலும் காணப்படவில்லை. கிரேக்கத் தத்துவ ஞானி பிளேட்டோ இம்மாதிரி அமைப்பு சமூகக் கட்டுக்கோப் புக்குத் தேவை என்று எழுதினர். ஆனால், அவருடைய எண்ணங்கள் வெறும் கற்பனைகளாக ஏடுகளிலே இருந் ததே தவிர எவராலும் நடைமுறைப்படுத்தப்பட்ட தில்லை.

இந்து சமுதாயத்தில் இந்த அமைப்பு முறையை ஆதாரமாகக்கொண்டு பலரும் பலவிதமான நீதி முறை களை வகுத்தார்கள். இந்த முறைகள் மனிதனின் அன்றாட வாழ்க்கைகளைக் கட்டுப்படுத்தக்கூடிய அள வுக்கு ஆதிக்கம் பெற்றவைகளாகவே இருந்தன.

இந்த நீதி முறைகளை ஒழுங்குபடுத்திக் கொடுத் தவர், மனு. ஒரு லட்சம் ஸ்லோகங்கள் கொண்ட பன்னிரண்டு புத்தகங்களில், மன்னரிலிருந்து சாதாரண மனிதர்கள் வரை, ஓர் இந்து எவ்வாறு தன்

னுடைய வாழ்க்கையை நடத்த வேண்டுமென்று மனு எடுத்துச் சொல்லியிருக்கிறுர். இவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவராய் இருக்க வேண்டு மென ஆராய்ச்சியாளர்கள் அனுமானிக்கிறுர்கள். இன்று வரையிலும் இந்துக்களின் வாழ்க்கைமீது அல்லது இந்துக்களின் வாழ்க்கைக் கண்ணேட்டத்தின் மீது மனு நீதிக்குள்ள ஆதிக்கத்தை எவரும் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது.

ஏன்? இன்றைக்கு நடைமுறையில் இருக்கும் இந்துச் சட்டத்தின் (Hindu Law) பெரும் பகுதி, மனு நீதியில் சொல்லப்பட்டுள்ள விஷயங்களைத்தான் ஆதாரமாக வைத்து இயற்றப்பட்டிருக்கிறது என்பதே, இந்துக்களின்மீது மனு நீதிக்குள்ள ஆதிக்கத்தைப் புலப்படுத்த போதுமான சான்ருகும். பொதுவாக, இந்தப் போக்குகள் இந்து மதத்தின் ஒரு புறமிருக்க, இந்து மதத்தில் பெண்கள் எந்தத் தரத்தில் வைத்து அந்தக் காலத்தில் மதிக்கப்பட்டார்கள் என்பதை அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

# 3. மனு நீதி காலப் பெண்கள்

சமீபத்தில் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஞாயிறு இதழில் வங்காளப் பெண்மணி எழுதிய கட்டுரை ஒன்றைப் படித்தேன். வால்மீகி ராமாயணத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பைப் படித்துவிட்டு அவர் அந்தக் கட்டுரையை எழுதி இருக்கிருர். கட்டுரை முழுவதிலும் அவருடைய கோபம் தெளிவாகவே வெளிப்பட்டிருக்கிறது. பெண் களைக் கேவலப்படுத்துவதற்காக எழுதப்பட்ட காவியம் ராமாயணம் என்று அவர் ராமாயணத்தைச் சாடியிருக் கிருர்.

பெண்கள் வெறும் கவர்ச்சிப் பொருள்கள் என்பது போலவும், மனித உணர்வுகளுக்கும் அவர்களுக்கும் சம்பந்தமில்லை என்பது போலவும் ராமாயணக் காவியம் வர்ணித்திருப்பதாக அவர் குறை கூறியிருக் கிருர். பெண்களின், குறிப்பாகச் சீதையின், அங்க அவயவங்கள் வர்ணிக்கப்பட்டுள்ள அளவுக்கு அவ ளுடைய உணர்ச்சிகள் மதித்து வர்ணிக்கப்படவில்லை எனவும், வால்மீகி ராமாயணத்திலிருந்து பல மேற் கோள்களை எடுத்துக் காட்டி அவர் விளக்கி இருக்கிருர்.

இதிலுள்ள உண்மையினை எந்த இந்துவும் மறுத்துவிடுவதற்கில்லை. ஆனல், வேத காலமும் உப

# 3. மனு நீதி காலப் பெண்கள்

சமீபத்தில் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஞாயிறு இதழில் வங்காளப் பெண்மணி எழுதிய கட்டுரை ஒன்றைப் படித்தேன். வால்மீகி ராமாயணத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பைப் படித்துவிட்டு அவர் அந்தக் கட்டுரையை எழுதி இருக்கிருர். கட்டுரை முழுவதிலும் அவருடைய கோபம் தெளிவாகவே வெளிப்பட்டிருக்கிறது. பெண்களைக் கேவலப்படுத்துவதற்காக எழுதப்பட்ட காவியம் ராமாயணம் என்று அவர் ராமாயணத்தைச் சாடியிருக்கிருர்.

பெண்கள் வெறும் கவர்ச்சிப் பொருள்கள் என்பது போலவும், மனித உணர்வுகளுக்கும் அவர்களுக்கும் சம்பந்தமில்லை என்பது போலவும் ராமாயணக் காவியம் வர்ணித்திருப்பதாக அவர் குறை கூறியிருக்கிருர். பெண்களின், குறிப்பாகச் சீதையின், அங்க அவயவங்கள் வர்ணிக்கப்பட்டுள்ள அளவுக்கு அவளுடைய உணர்ச்சிகள் மதித்து வர்ணிக்கப்படவில்லை எனவும், வால்மீகி ராமாயணத்திலிருந்து பல மேற்கோள்களை எடுத்துக் காட்டி அவர் விளக்கி இருக்கிருர்.

இதிலுள்ள உண்மையினை எந்த இந்துவும் மறுத்துவிடுவதற்கில்லை. ஆனுல், வேத காலமும் உப

கொல்லுவதை மனுநீதி குற்றம் என்று ஏற்றுக்கொண்டாலும், அது கடுமையான தண்டனைக்குரிய குற்றமல்ல என்றும் எடுத்துச் சொல்லுகிறது.

பெண் என்பவள் எல்லாவற்றையும் நாசமாக்கி விடக்கூடிய பெரிய சாபக்கேடு என்று, மகாபாரதத்தில் ஒரு ஸ்லோகம், கவிதை அழகோடு சொல்லுகிறது. விஷ ஜந்துக்களைத் தீண்டுவதற்கு எவ்வளவு பயப்படுவோமோ அதைவிட அதிகமாக ஒரு பெண்ணைத் தீண்டுவதற்கு விவேகி பயப்படுவான் என்றும் மகாபாரதம் சொல்லுகிறது.

தனக்குப் பிறப்பளித்த தாயும் ஒரு பெண் என்பதை மறந்துவிட்டுப் பெண் குலத்தையே கேவலப்படுத்துவதில் இடையில் வந்த சிலர் ஆர்வம் காட்டினுர்கள். ஆனுல், இந்து மதத்தின் மூல ஆதாரங்களான வேதங்களும் உபநிஷதங்களும் பெண்களை உயர்வாகவே கருதிப் போற்றி இருக்கின்றன. குறிப்பாக, உபநிஷதங்களில் பெண்ணைப் பெருமைப்படுத்தும் விஷயங்கள் ஏராளமாக உள்ளன.

இந்துக்களின் அறிவுக்குக் கடவுள், சரஸ்வதி. அவள் எப்போதுமே இடைவிடாமல் படித்துக்கொண்டிருக்கிருள் என்பது ஒரு ஐதிகம். செல்வத்துக்கு கடவுள், லட்சுமி. அவளும் ஒரு பெண். இந்த லட்சுமியை அஷ்டலட்சுமி எனறு எட்டு விதமாக வழிபட்டு வருகிறவர்கள் இந்துக்கள்.

சக்தியின் வடிவாக இந்துக்கள் பெண்ணைத்தான் உருவகப்படுத்திஞர்கள். பிரபஞ்சத்தின் முழு இயக்கமும் சக்தியால் நடைபெறுகிறது என்று கண்டவர்கள் இந்துக்கள். உலகத்தை இயக்கிடும் ஆற்றல் படைத்தவர்களாகப் பெண்ணைத்தான் இந்துக்கள் கருதினுர்கள்

என்பதற்குச் சக்தியைப் பெண் உருவில் அவர்கள் வழிபடுவது ஒரு சான்ருகும்.

பெண்ணை இழிவாக இந்து மதமோ அன்றி இந்து மதத் தத்துவங்களுக்கு விளக்கம் சொல்ல வந்த பெரியவர்களோ ஒரு போதும் கேவலப்படுத்தியதில்லை. சூடிக் கொடுத்த சுடர்க்கொடி, மங்கையர்க்கரசி போன்ற பக்தைகளை இந்து மதம் ஏற்றுக்கொண்டு வழிபாட்டிற்குரியவர்களாக இன்றைக்கும் போற்றி மதித்து வருகிறது.

ஆக, மனுநீதியை இந்து மதச் சிந்தனையின் விளக்க நூலாக ஏற்றுக்கொள்ளுவதற்கு வழியில்லை.

இவற்றையெல்லாம் நான் குறிப்பிடுவதற்குக் காரணம், வரலாற்று ரீதியாக இந்து மதம் உருவான கதையை இந்து மதத்தில் அக்கறை கொண்டுள்ள அனைவரும் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான்.

உபநிஷதங்கள் பால் உணர்ச்சியை, அதாவது செக்ஸ் உணர்ச்சியை, கேவலமாக எண்ணியதில்லை. பெண்ணைக் கேவலப்படுத்துவதற்கு இந்து மதத்தில் ஆதாரம் இருக்கிறது என்று சொலலுகின்றவர்கள், பெண்களை வெறுக்கின்ற, வக்கரித்த புத்தி கொண்டவர்களாகவே இருக்கவேண்டும்.

# 4. இந்து மதப் புரட்சிக்காரர்கள்

இந்து மத அமைப்பு முறை, குறிப்பாக வருணப் பாகுபாடு முறையில் குறைகள் ஏராளமாக இருந்தாலும் அது பன்னெடுங்காலமாகப் பயனுள்ள முறையில் செயல்பட்டு வந்திருப்பதால், இந்து மத ஈடுபாடு கொண்டவர்கள் இந்தக் குறைகளை அதிகமாகப் பொருட்படுத்திப் பேசுவதில்லை. பிராமணர்களின் மேலாதிக்கத்தை இந்துக்கள் ஒரு மதத் தேவையாக நெடுங்காலமாக ஏற்று வந்திருக்கிறார்கள்.

ஆனாலும், பெரியாரின் தலைமையில் உருவான சுயமரியாதை இயக்கம், பிராமண ஆதிக்கத்தை எதிர்க்கும் நோக்கத்தில், இந்து மதத்தின் நல்லவை களையும் எதிர்க்கும் காரியத்தில் சமீப காலத்தில் ஈடு பட்டு வந்திருக்கிறது. இம்மாதிரியான எதிர்ப்பு இயக் கங்கள் இந்து மதத்திற்குப் புதியவையல்ல. வேத காலத்திலிருந்து கோட்பாடுகளை அறிவுப் பூர்வமாக அணுகி, ஏன் என்று கேட்டு, முரண்பாடுகளைச் சுட்டிக் காட்டி, வாதப் பிரதிவாதங்கள் செய்த சிந்தனையாளர் களும் இருக்கவே செய்தார்கள். இவர்களை இந்து மதத்தின் புரட்சிக்காரர்கள் என்று சொல்லலாம். இவர்கள் சொல்லியுள்ள விஷயங்கள் இடைக்கால இந்துமத அனுஷ்டானங்களில் ஊறிப்போனவர்க

ளுக்கு இப்போதைக்குக்கூட அதிர்ச்சியளிப்பனவாக இருக்கலாம். எனவேதான், இந்துமத சாஸ்திரங்களுக்கு விளக்கம் சொன்ன பலரும், இந்தச் சிந்தனையாளர்களின் பெயர்கள் மக்களின் கவனத்திற்கு வராதவாறு பார்த்துக்கொள்ளுவதில் மிகவும் அக்கறையுடன் இருந்தார்கள். ஆனால், இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் ஒரு விஷயத்தை மறந்துவிடக்கூடாது. உபநிஷத காலத்தி ல் புரட்சிக்காரர்கள் இல்லாமல் போய் இருப்பார்களேயானால், இந்து மதம் தன்னுடைய ஜீவ சக்தியை இழந்து நீண்ட நெடுங்காலம் ஆகியிருக்கும்.

உபநிஷத காலப் புரட்சிக்காரர்களில் குறிப்பிடத் தக்கவர் **பிரகஸ்பதி.** கி. மு. 500-ல், அதாவது 2500 ஆண்டுகளுக்கு முன்பு, பிரகஸ்பதி வாழ்ந்திருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் யூகிக்கிறார்கள். அவரைப்பற்றி முழுமையான தகவல்கள் நமக்கு இப்போது கிடைக்கவில்லை. அந்தக் காலத்தில் வாழ்ந்த மிகப்பெரிய சிந்தனையாளர் அவர் என்பதும், அப்போது இருந்த நடைமுறைப் போக்குகளை அவர் வன்மையாகக் கண்டித்தார் என்பதும் நிச்சயமாகத் தெரிகிறது. அவர் காலத்தில் வாழ்ந்த பிற்போக்காளர்கள் அவருடைய சிந்தனைகள் மக்களுக்குக் கிடைக்காமல் செய்வதில் மிகுந்த விழிப்புணர்ச்சியுடன் இருந்திருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. ஆனாலும்கூட, அவர்கள் பிரகஸ்பதியின் சிந்தனைகளை எதிர்க்க வேண்டிய கட்டாயத்தில் இருந்ததால், தங்களுடைய படைப்புகளில் அவருடைய கூற்றுகளை மறுத்து எழுதி இருக்கிறார்கள். இதன் மூலமாக பிரகஸ்பதி என்ன கருத்துகளை வெளியிட்டார் என்பதும் நமக்குக் கிடைத்திருக்கிறது.

வேதங்கள் கடவுளால் அருளப்பட்டவை என்றும், ஆகவே அவை புனிதமானவை என்றும் பலரும் ஏற்றுக்கொண்டிருந்த நிலையில், பிரகஸ்பதி வேதங்கள் மனிதர்களைச் சிறைப்படுத்தும் கூண்டுகள் என்றும், அவை மோசக்காரர்களால் தயாரிக்கப்பட்டவை என்றும் கூறினர். பிராமண குருமார்களைச் சோம்பேறிகள் என்று வர்ணித்தார். மத குருமார்கள் தேவையற்றவர்கள் என்பதும், வேலை பார்க்காமல் வயிறு வளர்ப்பவர்கள் என்பதும் பிரகஸ்பதியின் கருத்துகள். நம்பிக்கை கொண்டவர்கள் தங்களுக்கு வாழ்க்கை விமோசனம் கிடைக்கும் என்று இவர்களுக்கு அள்ளிக் கொட்டுகிறார்கள் என்றும், விமோசனம் கிடைத்தால் அது மத புரோகிதர்களின் மந்திர உபாசனையால் கிடைத்தது என்றும், அவர்களுக்கு நன்மை கிடைக்காவிட்டால் அது அள்ளிக் கொடுத்தவர்கள் செய்த பாவத்தின் விளைவு என்றும் புரோகிதர்கள் விளக்கம் சொன்னார்கள். வேதங்களில் சொல்லப்பட்டவைகளைக் கண்மூடித்தனமாக நம்பியவர்களை முட்டாள்கள் என்று பிரகஸ்பதி குறிப்பிட்டார். பிராமண குருமார்கள் அவரை அசுரர்களின் கையாள் என்று வர்ணித்தார்கள்.

பிராமண மத குருமார்களைக் கடுமையாக விமர்சித்தவர்களுள் சார்வாகர் குறிப்பிடத்தக்கவர். அவர் மிகப்பெரிய தத்துவ ஞானியுங்கூட. இன்றைய வழக்கில் லோகாயதம் (Materialism) என்று எதைக் குறிப்பிடுகிறார்களோ அந்தத் தத்துவத்தை அந்தக் காலத்திலே சொன்னவர் சார்வாகர். ஆன்மிகம், கடவுள் என்று சொல்லுவனவெல்லாம் பெரும் மோசடிகள் எனவும், உலகத்தில் மெய்யானது “பொருள்” (Matter) ஒன்றுதான் என்றும் சொன்னவர் இவர். மனம் என்

பதே ஒரு பொருள்தான் என்றும், அறிவு, உணர்வு என்பனவெல்லாம் அந்த மனத்திலிருந்துதான் நாம் பெறுகிறேம் என்றும் சார்வாகர் சொன்ஞர். இதற்கு முன்ஞல் ஏதோ ஒன்று நடந்தது என்பதற்காக இப் போதும் அது போல ஏதோ ஒன்று நடக்கும் என நிரூபிப்பது முடியாத காரியம் என்கிற கருத்தைச் சொன்னவர் சார்வாகர்தான். இதே கருத்தைத்தான் பின்னர் வந்த நவீன காலத் தத்துவ ஞானிகளும் சொல்லி இருக்கிருர்கள். காரியங்களுக்குக் காரணம் இருக்க வேண்டும் என்கிற வாதத்தைச் சார்வாகர் ஏற்றுக்கொள்ளவில்லை. விதி, கடவுள் போன்ற விஷயங்களுக்கு மிகப்பெரிய எதிர்ப்புத் தத்துவத்தை சார்வாகர் உருவாக்கிஞர்.

பிரகஸ்பதியைவிடவும் மிகவும் கடுமையாக சார்வாகர் மதத்தைத் தாக்கிஞர். மத புரோகிதர்களை விஷ ஜந்துக்கள் என்று வர்ணித்தார். மதச் சடங்கு களிலிருந்து யாத்திரை போதல் வரை அனைத்தும் பணம் பறிப்பதற்கு மத குருமார்கள் செய்யும் சூழ்ச்சி என்பது சார்வாகரின் கருத்து.

பிரகஸ்பதிக்கு ஆதரவாளாகள் நிறைய இருக்க வில்லை. ஆஞல், சார்வாகரின் கோட்பாடுகளைப் பலரும் ஏற்றுக்கொண்டு அவருக்கு மாணுக்கர்கள் ஆஞர்கள். சார்வாகரின் தத்துவம் ஒரு புதிய சிந்தனை அமைப் பாயிற்று.

சார்வாகரின் சிந்தனைகள் நாஸ்திகவாதம் என்று வழங்கப்பட்டன. பிராமண குருமார்கள் சொல்லுவதும் செய்வதும் மோசடி என்ருல், பிறகு மக்கள் எந்த வழியைப் பின்பற்றுவது என்கிற கேள்வி எழுந்தது.

இந்தக் கேள்விக்குப் பதில் அளித்தவர் ஜாவளி. இவர், கண்மூடித்தனமான ஒழுக்கக் கோட்பாடுகளால் சமூகத்திற்கும் தனி மனிதர்களுக்கும் எந்த விதமான பலனுமில்லை என்று போதித்தார். சார்வாகர், ஜாவளி போன்றவர்கள், மனம் சந்தோஷப்படும்படியான காரியங்களில ஈடுபடுங்கள், சுவையான உணவை உண்ணுங்கள், மகிழ்ச்சி தரும் பானங்களைப் பருகுங்கள், மனத்திற்கு சந்தோஷம் ஏற்படக்கூடிய காரியங்களில் ஈடுபடுங்கள், வாழ்கின்ற வரையில் வாழ்க்கையை அனுபவியுங்கள், ஏனெனில், மரணத்திற்குப் பிறகு நீங்கள் அனுபவிக்கப்போவது ஒன்றுமில்லை என்றெல்லாம் உபதேசித்தார்கள்.

இவை கேட்பதற்கு ஆரம்பத்தில சுவையாக இருந்தன. ஆனால், வாழ்க்கையின் பிரச்சினைகளுக்குப் பதிலளிக்கக்கூடிய விஷயங்களாக இவை இல்லை.

மத குருமார்கள் மோசமானவர்கள், மதம் முட்டாள்தனமானது, கடவுள் என ஒருவர் இல்லை, அது வெறும் கற்பனை என்று சொல்லப்பட்டாலும் இந்த எதிர்மறைக் கோட்பாடுகளில் ஏதோ ஒரு குறை இருப்பது போலத் தோன்றியது.

இந்தக் குறைகளைப் போக்கச் சிந்தனையாளர்கள் வெளியிட்ட எண்ணங்களின் தொகுப்பே உபநிஷதங்கள் என்கிற பெயரைப் பெற்றன.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஓர் உண்மையை நாம் மறந்துவிடக்கூடாது. அந்தக் காலத்தில் வாழ்வே மாயம் என்று சொன்ன மாயாவாதிகளும் சரி, கடவுளே இல்லை என்று சாதித்த நாஸ்திகர்களும் சரி, வாழ்க்கையின்மீது ஈடுபாடு கொண்டவர்களாகவே இருந்திருக்கிறார்கள். வாழ்வே மாயம் என்று சொன்னவனும்

புகழுக்கு ஆசைப்பட்டிருக்கிறான்; கடவுளை வழிபடுவது அவசியமில்லை என்று சொன்னவனும் தன்னை வழிபடு வதற்கும் பாராட்டுவதற்கும் ஒரு கூட்டத்தை சேர்த்துக்கொள்ளத் துடித்திருக்கிறான்.

உபநிஷதங்களை உருவாக்கிய பெரியவர்கள் வாழ்க்கையைப்பற்றி நிறைய சிந்தித்திருக்கிறார்கள். அவர்களுடைய எண்ணங்கள் இன்றுவரை சமூகச் சிந்தனையைக் குறிப்பிடத்தக்க அளவிற்குப் பாதித்து வந்திருக்கின்றன. ஜன சந்தடியற்ற தபோவனங்களில் அமர்ந்து; தாங்கள் சிந்தித்துக் கண்ட கருத்துகளை அவர்கள் உலகத்திற்குச் சொன்னார்கள். அவர்க ளுடைய சீடர்கள் அவர்கள் சொன்னவற்றைப் பதிவு செய்து வைத்து இருக்காவிட்டால் அவர்கள் சொன்ன விஷயங்கள் நமக்குக் கிடைக்காமலே போயிருக்கும்.

'உபநிஷத்' என்கிற சொல்லுக்கு இரகசியம் என்பது பொருள். இரகசியமாக வைக்கப்படவேண்டும் என்பதற்காக அந்தச் சொல் பயன்பட்டதா அல்லது பிரபஞ்ச இரகசியங்களைச் சொல்ல முயன்றார்கள் என்கிற கருத்தில் அந்தப் பெயர் வந்ததா என்பது ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்து சொல்ல வேண்டிய விஷயம்.

# 5. கௌதம புத்தர்

இந்து மதத்தின் அடிப்படைக் கோட்பாடுகளைக் கடுமையாக எதிர்த்தவர், புத்தர் என்று அழைக்கப் பட்ட இளவரசர் சித்தார்த்தர் ஆவார். புத்தர் வாழ்ந்த காலமும் உபநிஷத காலமும் ஒன்ருக இருக்க வேண் டுமெனச் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் சொல்லு கிருர்கள். புத்தரின் காலத்தில் பிராமண மத குருமார் களின் ஆதிக்கம் கடுமையானதாக இருந்திருக்க வேண்டும். இந்து மதத்தின் சம்பிரதாய இறுக்கத்தி லிருந்து மக்களை எவ்வாறு விடுவிப்பது என்று சித் தார்த்தர் எண்ணி இருக்க வேண்டும்.

இளவரசரான சித்தார்த்தர் ஆடம்பரத்திலும் சுக போகத்திலும் வாழ்ந்தார் என்று சொல்ல வேண்டிய அவசியமில்லை. அவர் போதனைகளை வைத்துப் பார்க் கும்போது, அவருடைய வாழ்க்கையைப்பற்றிச் சொல் லப்படும் பல விஷயங்கள் கற்பனைக் கதைகளாக இருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

மகன் துறவு பூண்டுவிடுவான் என்று நிமித்திகன் கூறியதைக் கேட்ட அரசர் சுத்தோதனர், உலகின் கஷ்டங்களை அறியாதவாறு மகனைப் போக மாளிகை யில் சிறை வைத்தார். யசோதரா என்கிற அழகான

பெண்ணையும் அவருக்கு மணம் முடித்து வைத்தார். இந்தத் திருமணத்தின் விளைவாக இராகுலன் என்கிற குழந்தையும் சித்தார்த்தருக்குப் பிறந்தது.

வெளியே உலாவப் புறப்பட்டுச் சென்ற சித்தார்த்தர், ஒருநாள் வயோதிகனைப் பார்த்தார். ஒவ்வொரு மனிதனுக்கும் மூப்பு வந்து அவனைச் செயல்பட முடியாமல் செய்துவிடுகிறது என்கிற உண்மையைக் கண்டறிந்தார்.

மற்று ஒருநாள், நோயாளி ஒருவனைப் பாாத்தார். நோயிலிருந்து மனிதன் தப்ப முடியாது என்கிற மகத்தான வாழ்க்கை உண்மை அவருக்குப் புலனாயிற்று.

இன்னொரு நாள் பிணம் ஒன்றை மனிதர்கள் சுமந்து செல்லுவதைப் பார்த்தார். வாழ்க்கையில் ஏதோ ஒரு கட்டத்தில் மரணம் வந்தே தீரும் என்று அவர் தெரிந்துகொண்டார்.

புத்தரின் வாழ்க்கையில் இந்த மூன்று சம்பவங்களும் அவருடைய சிந்தனையை மாற்றியமைத்த விஷயங்களாகக் குறிக்கப்படுகின்றன.

இவை புத்தரைப்பற்றிச் சொல்லப்பட்ட கற்பனைச் சம்பவங்களாக இருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

ஏனெனில், வயோதிகர்களை அவருடைய அரண்மனையிலேயே அவர் சந்தித்து இருக்க முடியும். அது போலவே நோயாளிகளையும் அவர் பார்த்து இருக்க முடியும். பிணத்தைப் பார்க்காமலேகூட மரணத்தைப்பற்றி அவர் எண்ணி இருக்க முடியும்.

புத்தரின் வாழ்க்கையை நாடகப்படுத்த விரும்பிய சிலர் இந்தச் சம்பவங்களை மிகைப்பட கற்பனை செய்திருக்கலாம்.

மூப்பு, நோய், மரணம் ஆகிய துன்பங்களுக்கு எவ்வாறு நிவர்த்தி காண்பது என எண்ணிய புத்தர், இவைகளைப்பற்றி நீண்ட காலமாகச் சிந்தித்து வதிந்ருக்க வேண்டும்.

இந்த மூன்று விஷயங்கள் மட்டுமே சித்தார்த்தரின் வாழ்க்கையை மாற்றி அவரைப் புத்தராக்கி இருக்கும் என்று எண்ணுவதற்கு இடமில்லை. ஏனெனில், அந்தக் காலத்திலும் நோய்களைக் குணப்படுத்த மருத்துவம் இருந்தது. வயோதிகத்தில் கஷ்டங்களைக் குறைப்பதற்கு வழிகள் இருந்தன. மரணம் குறித்துச் சிந்தித்து ஆறுதல் பெற ஆன்மிகப் போதனைகள் இருந்தன.

ஆனாலும், வாழ்க்கை பற்றி—வாழ்க்கையின் துயரங்கள் பற்றி—புத்தர் சிந்தித்ததற்கு வேறு ஆழமான காரணங்கள் இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் புத்தர் உபதேசித்த போதனைகளைப் படித்தால், உபநிஷதங்களை அவர் ஆழமாகப் படித்து, அவற்றின் சாரத்தை உணர்ந்திருந்தார் என்பதற்குப் போதுமான சான்றுகள் இருக்கின்றன.

ஆனால், வேதங்களின் கருத்துகளைப் புத்தர் ஏற்றுக்கொள்ளவில்லை. உபநிஷத கருத்துக்களை ஆதாரமாக வைத்துச் சிந்தித்தார் என எண்ணுவதில் தவறில்லை. ஆனால், வாழ்க்கையின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப் புத்தர் பல ஆண்டுகள் தவம் இயற்ற வேண்டியிருந்தது. நீண்ட காலச் சிந்தனைகளின் விளை

வாக அவர் சில உண்மைகளைக் கண்டறிந்து உலகத்திற்குச் சொன்னார். பல்வேறு தத்துவக் குழப்பங்களில் தடுமாறிய மக்களுக்குப் புத்தரின் போதனைகள் அரும் பெரும் வரப்பிரசாதமாக அமைந்தன. புத்தர் கண்ட நெறி, ஒரு புரட்சி நெறியாய் அமைந்தது.

கடவுளைப்பற்றி நான் கவலைப்படவில்லை என்று சொன்னவர் புத்தர். தெரியாத மறு உலகத்தைப் பற்றிக் குழப்பிக்கொள்வதைவிடத் தெரிந்த இந்த உலகத்தில் நிகழ்ந்துவிட்ட மனித பிறப்பிற்கு நிவாரணம் தேடுவதே என்னுடைய முதல் கடமையாகும் என்று சொன்னவரும் அவரே.

வாழ்க்கையில் மனிதன் துன்பங்களிலிருந்து விடுபட எட்டு வழிகளை எடுத்துச் சொன்னவர், புத்தர். வேதங்கள் பதிலளிக்கத் தவறிய பிரச்சினைகளுக்குத் தம் சிந்தனையின் மூலம் பதில் சொன்னவர்களுள் குறிப்பிடத்தக்கவர் புத்தர்.

# 6. உபநிஷத கால இந்துகள்

ஒவ்வோர் இந்துவின் வாழ்க்கையும் நான்கு நிலைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. குருவிடம் வேதம் பயின்ற காலம் பிரம்மச்சரியம் என்று வழங்கப்பட்டது.

அதன் பிறகு ஒருத்தியை அவன் திருமணம் செய்துகொண்டு நடத்திய இல்வாழ்க்கை, கிரகஸ்தம் என்று வழங்கப்பட்டது. இந்தக் காலத்தில் அவன் நல்ல பிரஜையாகவும், நல்ல தந்தையாகவும், நல்ல தாத்தாவாகவும், தன்னுடைய பொறுப்புக்களைச் செய்வது அவனுடைய கடமையாகிறது.

இந்தக் கடமையை முடித்தவுடன் அவன் வானப் பிரஸ்த நிலையை அடைகிறான். அதாவது, இல்லறத் தில் அவன் ஆற்ற வேண்டிய கடமைகள் சில இருப் பினும் பந்தபாசங்களுக்குக் கட்டுப்படாதவனாகவும் தாம்பத்ய உறவில் நாட்டமில்லாதவனாகவும் அவன் இருக்கிறான்.

அடுத்து, அவன் மேற்கொள்ளுவது, துறவு நிலை. குடும்பத்தை விட்டு நீங்கித் தனிமையில் ஆசிரமம் அமைத்துக்கொண்டு, இறுதிவரையில் வாழ்க்கையை நடத்துகிறான். இது துறவு நிலையாகும்.

உபநிஷதங்களை உருவாக்கியவர்கள் இந்த நிலையை மாற்றி அமைத்தார்கள். அவர்கள் ஆசிரமங்களுக்குச் சென்றார்கள். வேத பாராயணம் செய்ததோடு அவர்கள் தங்களுடைய வேலையை நிறுத்திக் கொள்ளவில்லை. வேதங்கள் முடிவானவை என்கிற முடிவுகளுக்கும் அவர்கள் வந்துவிடவில்லை. அவர்களாகவே சிந்தித்தார்கள். வேதங்களை விமர்சனம் செய்தார்கள். வேதங்களுக்கு முரண்பட்ட கருத்துகளையும் சொன்னார்கள்.

உபநிஷத காலப் பெரியவர்களில் மிகவும் முதியவராக நம்முடைய கவனத்திற்கு வருகிறவர் யக்ஞவாக்கியர் ஆவார். இவர் புத்திக்கூர்மை மிகுந்தவர். பிராமண குருமார்களின் நடவடிக்கைகளையும் வேள்விகளையும் ஏற்றுக்கொள்ளாதவர். ஆனாலும், வயோதிகத்தில், விதிக்கப்பட்ட வழக்கப்படி காட்டிற்குச் சென்று ஆசிரமத்தில் வாழ்கிறார். சொத்து சுகங்களையெல்லாம் விட்டுவிட்டுக் கானகம் செல்லுகிறார். இவருக்கு இரண்டு மனைவிகள். ஒருத்தி, ஆடை ஆபரணங்களிலும் சுகமான வாழ்க்கையிலும் நாட்டம் கொண்டவள். மற்றொரு மனைவி, எதையும் யோசித்துப் பார்ப்பவள். முதல் மனைவி, சொத்தில் தன்னுடைய பாகத்தைப் பெற்றுக்கொண்டு திருப்தியோடு வாழ்கிறாள். இரண்டாவது மனைவிக்குச் சில சந்தேகங்கள் தோன்றுகின்றன. பணமும் பொருள்களும் தனக்கு அழியாத வாழ்க்கையைக் கொடுக்குமா என்று கேட்கிறாள். அதற்கு யக்ஞவாக்கியர் கொடுக்காது என்று சொல்லுகிறார். அவள் விடவில்லை. அழியாத வாழ்க்கையைக் கொடுக்க வல்லது எது என்று கேட்கிறாள். தன் கணவனுக்கு அழியாத வாழ்க்கை கிடைக்கும் ரகசியம் தெரியும் என்றும், அதைத் தம் மனைவி

களுக்குத் தெரிவிக்க அவர் விரும்பவில்லை என்றும் அவள் சந்தேகப்படுகிறாள். ஆகவே, சொத்தும் செல்வமும் தனக்கு வேண்டாம் என்று வெறுத்து விட்டுக் கணவரோடு காட்டிற்குச் சென்று உண்மையைத் தெரிந்துகொள்ள விருப்பம் தெரிவிக்கிறாள். அவர் சம்மதம் தெரிவிக்கிறான். அவள் அவரோடு காட்டிற்குச் செல்லுகிறாள். அவர் தமக்குத் தெரிந்த இரகசியத்தை அவளுக்கு உபதேசிக்கிறார்.

யக்ஞவாக்கியரைத் தொடர்ந்து அவர் மனைவி காட்டிற்குச் சென்றதைப் போலவே, வேறு சில பெண்டிரும் தங்கள் கணவன்மார்களைத் தொடர்ந்து கானகம் சென்று முக்தியும் அடைகிறார்கள்.

உபநிஷத காலத்தில் கேட்கப்பட்ட முக்கியமான கேள்விகள்: 'நான் யார்? நான் எப்படி இங்கு வந்தேன்? முடிவில் நான் எங்கு செல்லுவேன்? கடவுள் இருக்கிறாரா? இருந்தால் அவர் யார்?' முதல் கேள்விக்கு விடை காண முயன்ற உபநிஷத ஞானிகள் கடைசிக் கேள்விக்கும் விடை கண்டார்கள்.

உபநிஷதங்களின் செய்தி இது. சிந்தியுங்கள். வாழ்க்கைப் பிரச்சினைக்குச் சிந்தித்து முடிவு காணுங்கள். சிந்தனையின் மூலம் எந்தப் பிரச்சினைக்கும் தெளிவு கிடைக்கும் என்பதுதான் உபநிஷதங்களின் சாரம்.

உபநிஷதங்கள் எந்தப் பிரச்சினைக்கும் தெளிவான தீர்வைச் சொல்லிவிடவில்லை. ஆனால், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஞானிகள் வாழ்க்கையைப்பற்றியும் பிரபஞ்சத்தைப்பற்றியும் தெளிவாகச் சிந்தித்துத் தங்களுடைய ஆழமான கருத்துகளைச் சொல்லி இருக்கிறார்கள் என்பதிலிருந்து,

அவர்களது உயர்ந்த இலட்சியத்தையும் தெளிவான வாழ்க்கைக் கண்ணோட்டத்தையும் நன்கு புரிந்து கொள்ள முடியும்.

உபநிஷதங்களை இயற்றியவர்கள் விஞ்ஞானக் கண்ணோட்டத்தோடு பிரச்சினைகளை அணுகியவர்கள் என்பதில் சந்தேகமில்லை. நவீன காலத் தத்துவ ஞானிகள் சொல்லியுள்ள அனைத்துக் கருத்துகளுக்கும் மூலாதாரமான விஷயங்களை உபநிஷதங்களில் காண முடிகிறது.

இந்துமதச் சிந்தனையின் ஆதாரபூர்வமான கருவூலங்களாக உபநிஷதங்களைக் கருதலாம்.

# 7. சிந்தனைக்கு அஸ்திவாரம்

ஜாவளி போன்றவர்கள் நாஸ்திகர்களாக இருந்தார்கள் என்பது இந்து மதத்தின் பலவீனமல்ல. பார்க்கப் போனால் அதுவே இந்து மதத்தின் மிகப்பெரிய பலமுமாகும். கட்டுப்பாடற்ற சுயசிந்தனைக்கு இந்து மதத்தில் அங்கீகாரம் அளிக்கப்பட்டிருந்தது, நிச்சயமாக அதனுடைய பலவீனமல்ல. எதையும் ஏன் என்று கேட்டு ஆராயும் மனப்பக்குவத்தை உபநிஷத கால ஞானிகள் பெற்றிருந்தார்கள். அதன் காரணமாக, எந்த விதமான இறுக்கமான கட்டுப்பாட்டிற்குள்ளும் கோட்பாடுகள் வரையறுக்கப்படவில்லை. இதனால் நவீன காலத்தில் மதம் என்னும் சொல் என்ன பொருளில் கையாளப்படுகிறதோ அந்தப் பொருளில் இந்த மதம் ஒரு மதமாகாது. இந்த விஷயத்தில் இந்து மதம் ஏனைய மதங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது.

இதர மதங்கள் ஒழுக்க நெறிகளைப் போதித்தன. வாழ்க்கை நெறி என்று சில கட்டுப்பாடுகளை விதித்தன. இந்து மதத்திற்கென்று அடிப்படை நெறிகள் எவையுமில்லை.

உயிர்த் தத்துவத்தையும் பிரபஞ்ச ரகசியத்தையும் ஆராய்வதை இன்றைக்கு விஞ்ஞானம் என்று பெய

ரிட்டு வழங்குகிறோம். இந்த விஞ்ஞான சிந்தனைதான் இந்து மதத்தின் ஆரம்பம்.

ஆகவே, ஜாவளி போன்றவர்கள் லோகாயதம் என்னும் மெடிட்டீரியலிஸத்தைப் பேசியதில் தவறில்லை. அவர் சிந்தனைகளை ஒரு கூறாக இந்து மதம் ஏற்றுக்கொண்டது. இதன் விளைவாக இந்து மதம் முரண்பாடுகளின் இருப்பிடமாயிற்று. மனித அறிவு வளர்ச்சியில் முரண்பாடு தவிர்க்க முடியாதது. விஞ்ஞான உலகில்கூட ஒரு விஞ்ஞானியின் கருத்தை இன்னொரு விஞ்ஞானி மறுத்ததற்கு ஏராளமான சான்றுகள் உண்டு. அரிஸ்டாட்டில் சொன்னதை கலிலியோ ஏற்றுக்கொள்ளவில்லை. கலிலியோ சொன்னதை நியூட்டன் ஏற்கவில்லை. நியூட்டன் சொன்னதை ஐன்ஸ்டைன் ஏற்கவில்லை. இந்த முரண்பாடுகள் உண்மையில் முரண்பாடுகள் ஆகா.

உண்மையைக் கண்டறியும் முயற்சியில்—இயற்கையின் விதிகளைக் கணிக்கும் முயற்சியில்—இந்த விஞ்ஞானிகள் கண்டதைப் பல்வேறு பரிணாம வளர்ச்சி நிலைகளாகத்தான் கொள்ள வேண்டுமே தவிர முரண்பாடுகளாகப் பார்ப்பது ஆழமான கண்ணோட்டமாகாது.

அதைப்போலத்தான் வேதங்களில் சொல்லப்பட்ட கருத்துகளில் சிலவற்றை உபநிஷத சிந்தனையாளர்கள் மறுத்தார்கள். ஜாவளி போன்ற தீவிரவாதிகள் கடவுள் என்பதும் ஆன்மிகம் என்பதும் அர்த்தமற்ற கற்பனைகள் என்றும், மெய்யானது கண்ணெதிரே காணப்படும் பொருள் மட்டும்தான் என்றும் தங்கள் கருத்தை வெளியிட்டார்கள். கடவுளை இவர்கள் மறுத்ததால் கடவுளின் சார்பாக மதகுருமார்கள் சொன்னவை

களை எல்லாம் மோசடி என்று சித்திரித்தார்கள். கற்பனை விஷயங்களில் காலத்தைக் கடத்துவதைவிட, கிடைத்த வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க வேண்டுமென்று இவர்கள் வலியுறுத்தினார்கள்.

இந்தச் சிந்தனையிலிருந்து மாறுபட்டவர்கள், கண்டதே காட்சிஎன்றும், கொண்டதே கோலமென்றும் வாழ்வதால் உண்மையான இன்பத்தை அனுபவிக்க முடியாது என்றும், நம்மை நாமே உணர்ந்துகொள்ளு கின்றபோதுதான் மெய்யான இன்பத்தின் கதவுகள் திறக்கின்றன என்றும் எடுத்துச் சொன்னார்கள்.

உபநிஷதங்கள் அனைத்தும் ஒரே விஷயத்தைச் சொல்லவில்லை. அவைகளின் சாரத்தை வடித்துக் கொடுக்கும் முயற்சியின் விளைவாக எழுந் ததுதான் கீதை. எனவே, ஆன்மிகச் சிந்தனையில் கீதை பெற்றிருக்கும் இடத்தை வேறு எந்த நூலாலும் இது வரை பெற முடிந்ததில்லை.

உபநிஷதங்களின் சாரமாகக் கீதை உருவானதால் வாழ்க்கை பற்றிய மிகத் தெளிவான கண்ணோட்டத்தை நம்மால் அதில் காண முடிகிறது.

சராசரி மனிதனின் வாழ்க்கையில் தோன்றும் எந்தப் பிரச்சினைக்கும் கீதையில் தெளிவு இருக்கிறது. 'பலன் கருதாமல் செயல்படு' என்று கீதையில் சொல்லப் பட்டுள்ள நிஷ்காம கர்ம யோகத்திற்கு இணையான ஒரு தத்துவத்தை உலகில் இதுவரை வேறு எந்த நூலும் சொல்லியதில்லை.

# 8. அணுத்தத்துவமும் இந்து மதச் சிந்தனையும்

பிரபஞ்ச இயக்கத்தைப்பற்றி விரிவான ஆராய்ச்சிகள் நடத்தி உன்னதமான ஒப்புமைத் தத்துவத்தை கண்டறிந்த பிரபல விஞ்ஞானி ஐன்ஸ்டைன் "பிரபஞ்சம் இன்னமும் எனக்கொரு புதிராகவே காட்சியளிக்கிறது" எனக் குறிப்பிட்டார்.

இருபதாம் நூற்றுண்டின் இணையற்ற விஞ்ஞானி, ஐன்ஸ்டைன். அவர் ஆராய்ந்த பிரபஞ்ச ரகசியத்தைத்தான், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னுல் நம்முடைய உபநிஷத ஞானிகளும் ஆராய்ந்தார்கள் என்பதை, இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவுபடுத்திக்கொள்ளுவது நல்லது.

அணுத்தத்துவத்தைக் கண்டறிந்து சொன்னவரும் ஐன்ஸ்டைன்தான். அணுவைப் பிளக்காதே என்று சொன்னவரும் டால்டன் என்கிற ஒரு விஞ்ஞானிதான். அதாவது, பொருளின் பிரிக்க முடியாத மிகச்சிறிய பாகம் அணு. ஆகவே, அதைப் பிரிக்க யாராவது முயன்றுல் அவர்கள் தோல்வியே அடைவார்கள் என்றுர் டால்டன். ஆனுல், பின்னர் வந்த

விஞ்ஞானியான ஐன்ஸ்டைன் அணுவை உடைக்க முடியும் என்று சொன்னதோடு, அதை உடைக்கும் போது அதிலிருந்து பேராற்றல் வெளிப்படும் என்றும் எடுத்துக் காட்டினர்.

அது மட்டுமல்ல. அணுவுக்குள் நேர்மின் சக்தி கொண்ட துகள்களும் எதிர்மின் சக்தி கொண்ட துகள்களும் பயங்கரமான வேகத்தில் சுழன்றுகொண்டு இருக்கின்றன என்றும். பிரபஞ்சம் எப்படி நிலையில்லாமல் வானவெளியில் தொடர்ந்து பயணம் செய்துகொண்டிருக்கிறதோ அதைப்போல, அணுவுக்குள் இந்தத் துகள்கள் எப்போதும் இயங்கிக்கொண்டே இருக்கின்றன என்றும் அவர் சொன்னர். நவீன அணு விஞ்ஞானத்தையும் இந்துக்களின் ஆன்மிகக் கலைகளையும் ஒருசேரப் பயிலும் வாய்ப்புப் பெற்றவர்கள், நடராஜரின் ஊழிக்கூத்திலே இந்தத் தத்துவத்தை இந்துக்கள் அடக்கியிருப்பதாக விளக்கம் சொல்லுகிருர்கள்.

இந்துக்கள் சக்தி என்றும், சிவன் என்றும் இரண்டு கடவுள் தத்துவங்களைச் சொல்லி வைத்தார்கள். சக்தி இல்லையேல் சிவன் இல்லை என்பதும், சிவன் இல்லையேல் சக்தி இல்லை என்பதும், இரண்டும் ஒன்றேதான் என்பதும் இந்து மதக் கோட்பாடு.

அதாவது, இன்றைய விஞ்ஞானம், பொருள்-சக்தி குறித்து எதைக் கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறதோ அதையே இந்துப் பெரியவர்கள் மதக்கோட்பாடாகச் சொல்லி வைத்தார்கள்.

இன்றைய விஞ்ஞானம், சக்தி பற்றியும் பொருள் பற்றியும் என்ன சொல்லுகிறது என்று பார்க்கலாம். பொருளை அழித்தால் சக்தியாக மாறிவிடுகிறது என்கிறது விஞ்ஞானம். அல்லது சக்தியின் உறைந்த

நிலையைப் பொருள் என்கிறது. அதாவது, சக்தியைப் பொருளாக மாற்றலாம்; பொருளைச் சக்தியாக மாற்றலாம். இரண்டும், நிலைகளில்தான் வேறானவையே தவிர அடிப்படையில் ஒன்றுதான் என விஞ்ஞானம் அடித்துச் சொல்லுகிறது.

இதைத்தான் இந்துக்கள், சக்தியும் சிவனும் ஒன்று என்று சொன்னார்கள்.

இந்து மதத்தில் பல தெய்வ வழிபாடு இருப்பதை ஒரு குறையாகச் சொல்லுகிறார்கள். ஆனால், உபநிஷதங்கள் பல தெய்வங்களை ஏற்றுக்கொள்ளவில்லை.

பிரம்மம் என்கிற சொல்லுக்கு இந்து மதத்தில் விசேஷமான அர்த்தம் உண்டு. மனிதர்களும் பிரபஞ்ச படைப்பில் ஓர் அங்கமானதால் பிரபஞ்சத்திலிருந்து அவன் வேறுபட்டவனல்ல. ஆகவே, உலகெங்கும் வியாபித்திருக்கும் பிரம்மத்தின் ஒரு பகுதியே மனிதன் என்பது அவர்களுடைய வாதம். ஆகவே, கடவுள் என்றும், மனிதன் என்றும் இருவேறு விஷயங்கள் இல்லை, நீயேதான் கடவுள் என்றும் அவர்கள் போதித்தார்கள்.

# 9. வேதமொழி

சிந்தனையாளர்கள் சொன்னவைகளைச் சீடர்கள் எழுதினார்கள். அவை உபநிஷதங்கள் எனப் பெயர் பெற்றன. உபநிஷதம் என்ற சொல்லுக்கு 'எனக்கு நெருக்கமாக உட்கார்' என்கிற பொருளும் உண்டு. குருமார்களின் அருகில் சீடர்கள் அமர, அவர்கள் சொன்ன கருத்துகளே உபநிஷதங்களாயின. இந்தக் கருத்துகளைச் சொன்னவர்கள், அவை உலகெங்கும் பரவ வேண்டுமென எண்ணியதாகத் தெரியவில்லை. சிந்திப்பது மட்டுமே தங்களுடைய வேலை என்று அவர்கள் எண்ணியிருக்கக்கூடும்.

ஆனால், கௌதம புத்தர் தம் எண்ணங்களைச் சீடர்கள் மூலம் மக்களிடையே பரப்பிடும் அரிய முயற்சிகளை மேற்கொண்டார்.

வேதங்களும் சரி உபநிஷதங்களும் சரி, பிராகிருத மொழியில் எழுதப்பட்டன. அப்போது மக்களிடையே பேச்சு வழக்கில் இருந்த மொழியும் அதுதான். சமஸ் கிருத மொழி பின்னர்த் தோன்றிய மொழியாகும். வேதங்கள் முதலில் கேள்வியாறலாக இநந்தவை பின்னர் சமஸ்கிருத மொழியில் ஏடுகளில் பதிவு செய் யப்பட்டன. மொழிக்கு முதல் முதல் இலக்கணம்

கண்டவர்களே இந்துக்கள்தாம். வேதங்களைத் தொடர்ந்து பிராகிருத மொழியிலிருந்த உபநிஷதங்களும் சமஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கப்பட்டன.

தம் கருத்துகள் மக்களிடையே பரவலாக வேண்டும் என எண்ணிய புத்தர், தம் உபதேசங்கள் பிராகிருத மொழியிலேயே இருக்க வேண்டும் என்றும், சமஸ்கிருத மொழியில் மொழிபெயர்க்கக்கூடாது என்றும் திட்டவட்டமாகச் சீடர்களுக்கு உத்தரவு இட டார்.

வேதங்கள் சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட போது, மூலத்தில் காணப்படாத பல விஷயங்கள் மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளனவாக ஆராய்ச்சியாளர்கள் அனுமானிக்கிறார்கள். நூற்றுக்கு மேற்பட்ட உபநிஷதங்கள் இருந்தன. அவற்றுள் ஒருசிலவே இன்றைக்கும் இந்து சிந்தனையில் ஆதிக்கம் பெற்றவைகளாக உள்ளன.

உபநிஷதங்கள் வேதங்களைவிடவும் ஆழமான கருத்துகளைக் கொண்டிருந்தன. உபநிஷதங்களின் ஆசிரியர்கள் பிராமண மத குருமார்களுக்குப் பாதகமான கருத்துகளைச் சொல்லி இருந்தாலும், அவை சமஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கப்பட்டபோது இடைச் செருகல்களின் மூலம் அவற்றைச் சமாளித்தார்கள். உபநிஷதங்களை மேலெழுந்தவாரியாகப் படித்தாலுங் கூட அவற்றிலுள்ள ஒரு கருத்து அல்லது அழகிய ஒரு வாசகம் படிப்பவர்களின் மனத்தைத் தொட்டுச் சிந்திக்கத் தூண்டவே செய்யும்.

இந்திய எழுத்தாளர் ஒருவர் உபநிஷதங்களைப் பற்றி வெகு அழகாக கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்:

'ஒரு நாள் வராண்டாவில் அமர்ந்து நான் காற்று வாங்கிக்கொண்டிருந்தேன். அப்போது ஒரு துண்டுக் காகிதம் நான் இருந்த இடம் நோக்கிக் காற்றில் பறந்து வந்து என்பக்கமாக விழுந்தது. அது உபநிஷதத்தின் ஒரு பகுதி. அதைப் படித்த போது அதிலிருந்த ஒரு வாசகம் என்னுடைய வாழ்க்கையை மாற்றி அமைத்து விட்டது.'

இந்தக் கூற்று சற்று மிகைப்படுத்தப்பட்ட கூற்ருக இருக்கலாம். ஆனுல், உபநிஷத கருத்துகள் வழி வழியாகப் பல லட்சம் மக்களுடைய வாழ்க்கையினை யும் மாற்றி வந்திருக்கின்றன. பல நூற்ருண்டுகளுக் குப் பிறகு, இவைகளை எல்லாம் ஒழுங்குபடுத்தி, மக்க ளுக்குப் புரிகின்ற விதத்தில் எளிமையாகவும் தெளி வாகவும் சொல்லக்கூடிய மிகப்பெரிய ஞானி ஒருவர் தோன்றினுர். அவர்தான் ஆதி சங்கரர்.

உபநிஷதங்களின் முரண்பாடுகளையெல்லாம் சரி செய்து, அவற்றிற்குப் புதிய தத்துவ வடிவம் கொடுத் தவர், அவர்.

வேதாந்த தத்துவத்தின் கர்த்தாவும் அவரே. இது பற்றிய விரிவான விளக்கத்தைச் சங்கரரைப்பற்றிப் பேசும் போது பார்க்கலாம்.

உபநிஷதங்களில் கதோ உபநிஷத் குறிப்பிடத் தக்கது. இதற்கு 'நசிக்கேத உபநிஷதம்' என்னும் மற் ருெரு பெயரும் உண்டு. அது என்னவென்று அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.

# 10. நசிக்கேத உபநிஷதம்

நசிக்கேதன் என்பவன் ஒன்பது வயதுச் சிறுவன்; வயோதிக பிராமணர் ஒருவர் மகன். அவன் தந்தை தம் வயோதிகப் பருவத்தில் ஆசிரம வாழ்க்கையை மேற்கொள்ள விரும்பித் தம்முடைய சொத்துகளையெல்லாம் தானம் செய்தார். குறிப்பாகத் தம்முடைய கால்நடைகளைப் பிராமண புரோகிதர்களுக்குத் தானமாகக் கொடுத்தார்.

நசிக்கேதன் மத அனுஷ்டானங்களில் ஊறித் திளைத்தவனுயினும் எதையும் கூர்ந்து பார்த்து ஆராய்ந்து சிந்திக்கும் இயல்புடையவன். தானம் அளிக்கப்பட்ட பசுக்கள் அனைத்தும் தொத்தல் பசுக்கள்; கறவையில்லாத பசுக்கள். இந்தப் பசுக்களைப் பிராமணர்களுக்குத் தானம் செய்து அவர்களை ஏமாற்றும் தந்தை எப்படிப்பட்ட மோட்சத்திற்குச் செல்லுவார் என்று சந்தேகிக்கிருன். சாஸ்திரப்படி ஆசிரமம் செல்லும் வயோதிகர், அனைத்தையும் தானம் செய்ய வேண்டும் என்பது நியதி.

ஆகவே, நசிக்கேதன் தன் தந்தையைப் பார்த்துக் கேட்கிருன், "என்னை யாருக்குத் தானம் செய்யப் போகிறீர்கள்?" என்று.

நசிக்கேதனின் கேள்வியில் கேலி தொனிக்கிறது. அவன் தகப்பனுருக்கு அந்தக் கேள்வி தர்மசங்கடமா கிறது. அவருக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. கோபப்படுகிருர். திரும்பத்திரும்ப நசிக்கேதன் அந்தக் கேள்வியைக் கேட்பதால், "உன்னை மரணத்திடம் ஒப் படைக்கப் போகிறேன்" என்கிருர்.

மறு விநாடியே நசிக்கேதன் எமலோகத்தின் வாயிற்படியில் நிற்கிருன்,

இதுவரையில் கவிதை அழகோடு எல்லாம் அமை கின்றன. இதற்குப் பிறகுவரும் பகுதி இடைச்செருகல் என்று, பிரபல சமஸ்கிருத ஜெர்மன் ஆராய்ச்சியாளர் மேக்ஸ்முல்லர் குறிப்பிடுகிருர். அவர் கருத்துப்படி நசிக்கேதன் மரணத்தின் கடவுளான எமதர்மராஜன் முன்னிலையில் நின்றிருக்க வேண்டுமென்று மேக்ஸ் முல்லர் அபிப்பிராயப்படுகிருர்.

இடைச்செருகலின்படி நசிக்கேதன் எமலோகத் தின் வாயிற்படியில் மூன்று தினங்கள் காத்திருக்கிருன் கடைசியில், மூன்ரும் நாள் எமலோகத்தின் கதவு திறக் கப்பட்டு, எமதர்மராஜன் நசிக்கேதனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிருன். பின்னர் பிராமணர்களிடம் அன்பாகவும் ஆதரவாகவும் இருப்பதால் விளையும் பலன்களை விளக்கமாகவும் விரிவாகவும் எமதர்மராஜன் எடுத்துச் சொல்லுகிருன். ஒரு பிராமணன் ஒருவரு டைய வீட்டிற்கு வந்தால், அந்த வீட்டிற்கு அவனு டன்கூட எத்தகைய அதிர்ஷ்டங்களைக் கொண்டுவரு வான் என்றும் நசிக்கேதனுக்கு எமதர்மராஜன் விளக்குகிருன். பிராமணனுக்கு மோதிரம் அளித்து உபசரிக்காதவன் எந்த நன்மையினையும் பெற முடி

வாது என்று எமதர்மராஜன் எச்சரிக்கிறான். பின்னர் "பிராமணச் சிறுவனுன நீ மூன்று தினங்கள் என்னுடைய மாளிகையில் எதுவும் சாப்பிடாமல் இருந்திருக்கிறாய். ஆகவே, உனக்கு வேண்டிய மூன்று வரங்களைக் கேள்" எனக் கூறும் எமதர்மராஜன், நசிக்கேதனின் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கிறான்.

பிராமணச் சிறுவனுக்கு வரம் தருவதாகச் சொல்லும் எமதர்மராஜன் அவனுடைய காலில் விழுகிறான் என்பது குறிப்பிடத்தக்கது.

எமனின் முன் நசிக்கேதன் கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நிற்கிறான்.

இதுவரையிலுள்ள பகுதி இடைச்செருகல் என்று மேக்ஸ்முல்லர் கருதுகிறார்.

நசிக்கேதன் தந்தை, எமதர்மராஜன் பூலோகத்திற்குத் திருப்பி அனுப்பிவிடுவான் என்று எதிர்பார்க்கிறான். முதல்வரமாகத் தான் பூலோகத்திற்குத் திரும்பிச் செல்லும் போது தந்தை கோபப்படாமல் தன்னை வரவேற்க வேண்டும் என்று வேண்டுகிறான். அதற்கு எமன் சம்மதிக்கிறான்.

இரண்டாவது வரமாக, தான் இறக்கும் போது மோட்சத்திற்குப் போவதற்கு வழி என்னவென்று கூறுமாறு எமதர்மராஜனைக் கேட்கிறான்.

மீண்டும் இடைச்செருகல் ஆரம்பமாகிறது. எமதர்மராஜன், தீயை வளர்த்து மூன்று முறை யாகம் செய்ய வேண்டிய அவசியத்தை விரிவாக விளக்குகிறான்.

அடுத்து நசிக்கேதன் மூன்றாவது வரத்தைக் கேட்கிறான். "மனிதன் இறக்கிறான என்று சொல்லுகிறார்கள். சிலர், உடல்தான் இறக்கிறது என்று சொல்லுகிறார்கள். மூன்றாவது வரமாக அது பற்றி விளக்கம் கூறுங்கள்" என்று எமதர்மராஜனிடம் நசிக்கேதன் விளக்கம் கேட்கிறான்.

கடவுள்களுக்கே இது பற்றித் தெளிவில்லை என்று விளக்கம் சொல்லும் எமதர்மராஜன், "இதுபற்றி மேலும் மேலும் விளக்கம் கேட்டு என்னைத் தொந்தரவு செய்யாதே. வேண்டுமானால் வேறு ஏதாவது வரம் கேள்" என்கிறான்.

நசிக்கேதன் விடுவதாக இல்லை. மரணம் பற்றி விளக்கம் சொல்ல மற்றவர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால், மரணத்திற்குக் கடவுளான எமதர்மராஜனுக்கே இது விளங்கவில்லை என்றால் என்ன செய்வது என்று நசிக்கேதன் குழம்புகிறான்.

இந்த இக்கட்டான கேள்வியிலிருந்து தப்பித்தால் போதுமென்று எண்ணும் எமதர்மராஜன் "ஓ! பிராமணச் சிறுவனே, நூறாண்டுகள் உயிர் வாழும் மக்களையும் பேரன் பேத்திகளையும் உனக்கு அருளுகிறேன். ஆடு, மாடு, குதிரை, யானை, தங்கம் ஆகிய அனைத்தும் உனக்குக் கொடுக்கிறேன். மூவுலகில் எந்த இடத்தில் நீ வாழ விரும்பினாலும் அங்கே அழகிகள் புடை சூழ, இன்னிசைகள் முழங்க, ஓர் அரசனைப் போல் நீ வாழ உனக்கு வரம் அளிக்கிறேன். ஏற்றுக்கொள்" என்கிறான்.

நசிக்கேதன் விடவில்லை. "எமதர்மராஜனே, எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் நான் வாழ்வ

தற்கு நீ வரம் அளித்தாலும், முடிவில் ஒருநாள் நான் இறந்து போகத்தானே வேண்டும். அப்போது நீ கொடுக்கும் செல்வமெல்லாம் உனக்குத்தானே சொந்த மாகிவிடும். ஆகவே, இந்த வரம் எனக்கு வேண்டாம். சந்தேகத்தை முதலில் தீர்த்து வை. மரணத்திற்குப் பின் என்ன நிகழும் என்கிற ரகசியத்தை எனக்குச் சொல். வேறு வரம் எதுவும் எனக்கு வேண்டாம்.''

வேறு வழியில்லாமல் விளக்கமளிக்க எமன் சம்ம திக்கிறான். அவன் சொல்லுகிறான்:

''உண்மையான அறிவை நீ பெற வேண்டுமானால் உலகத்தின் இன்பங்களை நீ விட்டுவிட வேண்டும். ஒருவனை இன்னொருவன் கொல்லுவது என்பது முடியாத காரியம். ஓர் உயிர் கொல்லுவதுமில்லை, கொல்லப் படுவதுமில்லை. உண்மையாக நான் என்பது ஒவ்வொரு வரின் இருதயத்திற்குள்ளேயும் இருக்கிறது. வேதங் களைப் படிப்பதால் மட்டும் நான் யார் என்று உணர்ந்து கொண்டுவிட முடியாது. வெறும் புத்திசாலித்தனமும் அதை உணர்த்திவிடாது. பிறர் சொல்லக் கேட்ப தாலும் அது வந்துவிடாது.

உள்ளபடியே எமன் இதைப் பேசவில்லை. அந்த உபநிஷதத்தை உருவாக்கிய ஆசிரியர் எமன் என்கிற கற்பனைப் பாத்திரத்தின் மூலமாகத் தம் சிந்தனையை வெளியிடுகிறார்.

நான் யார் என்பதை நீயேதான் கண்டுபிடித்துக் கொள்ள வேண்டும் என்று கூறும் எமன், அழகான ஓர் உதாரணத்தையும் சொல்லுகிறான். ''ஒரு ரதத்தைக் கற்பனை செய்துகொள். உன் உடல்தான் அந்த ரதம். ஆசைகளும், சுகங்களும் அதைக் கட்டி இழுக்கும்

குதிரைகள். உன்னுடைய மனம்தான் அந்தக் குதிரை களுக்குப் போடப்பட்டுள்ள கடிவாளம். உன்னுடைய அதீத மனம் அல்லது மன உறுதிதான் அந்தத் தேருக்குப் பாகன். மனம், ஆசைகளை அளக்க வேண்டும். அதீதமனம், மனத்தை அடக்க வேண்டும். இந்தப் பயிற்சி நான் யார் என்கிற கேள்விக்கு உனக்கு விடையளிக்கும், உணர்வுகள் செயல்படாத போது, மனம் நிச்சலனமாய் இருக்கும்போது, அறிவு ஸ்திர நிலையை எய்தும் போது பேரானந்த நிலையை நீ பெறுவாய்.''

எமனின் உபதேசத்தை நசிக்கேதன் ஏற்றுக் கொள்கிறான். நான் என்கிற ஆன்மாவுக்கு அழிவில்லை என்று அறிந்துகொள்கிறான்.

எல்லா உபநிஷதங்களும் ஏறத்தாழ இதையேதான் சொல்லுகின்றன.

சாந்தோக்கிய உபநிஷதம் ஆன்மாபற்றி மேலும் பல விளக்கங்களைச் சொல்லுகிறது.

இந்த உபநிஷதம், இன்பங்களை அனுபவித்தாலும் மனிதன் ஆன்ம தரிசனம் பெற முடியும் என்று விளக்குகிறது.

பொதுவாக, இந்து மதத்தின் அடிப்படை விஷயங்களைக் கொண்டவை உபநிஷதங்களே என்று துணிந்து சொல்லிவிடலாம்.

# 11. ஆதிசங்கரர்

உலகத்தின் துன்பங்கள் அனைத்திற்கும் ஆசையே காரணம் என்றார் புத்தர். ஆசையை விட்டொழித்து மன அமைதி அடைவதை நிர்வாண நிலை என்று அவர் வர்ணித்தார்.

அவர் மரணமுற்ற பிறகு புத்த பிட்சுக்கள் நாடெங்கும், ஏன் அண்டை நாடுகளிலும், அவருடைய உபதேசங்களைப் பரப்பும் முயற்சியில் ஈடுபட்டார்கள் பந்த பாசங்களை விட்டொழித்த துறவிகளாக அவர்கள் வாழ்ந்தார்கள்.

புத்த மடங்களை நாடெங்கும் கட்டி போதனைகளைப் பரப்பினார்கள்.

புத்தம் என்பது உண்மையில் மதமே அல்ல. புத்த மதத்திற்கென்று கடவுள் இல்லை. சில நியதிகளை மனிதர்கள் கடைப்பிடித்தால் அவர்கள் வாழ்க்கைத் தொல்லைகளிலிருந்து விடுபட முடியும் என்பது அவர்களுடைய நம்பிக்கை.

அசோகர் புத்த மதத்தைத் தழுவினார். மாபெரும் போரில் வெற்றி பெற்ற அவர் போரின் கொடுமைகளைப் பார்த்து, அஹிம்சை வழியைப் பின்பற்ற எண்ணிப் பௌத்தரானார். விரிந்து பரந்த தம் சாம்ராஜ்யமெங்கும்

ஸ்தூபிகளை நிறுவி, புத்த மதக் கோட்பாடுகளை அவை களில் பொறித்து வைத்தார். அவரே சிறிது காலம் புத்த மடத்தில் துறவியாக வாழ்ந்திருக்கிறார்.

அசோகர் காலத்துக்கு முன் வரை பிராமணர்கள் மன்னர்களுக்கு ஆலோசகர்களாக விளங்கி ஆட்சி யிலும் செல்வாக்குடன் இருந்தார்கள். அசோகர் பிரா மணர்கள் பெற்றிருந்த இடத்தைப் பறிக்கவில்லையே தவிர, அவர்களின் அரசியல் செல்வாக்கைக் கணிச மாகக் குறைத்தார்.

அசோகர் புத்த மதத்தைத் தழுவினாரே தவிர இதர மதங்களை வெறுத்து ஒதுக்கவில்லை.

அசோகருக்குப் பின் புத்த மதம் படிப்படியாக அரசியல் செல்வாக்கை இழக்கத் தொடங்கியது.

உபநிஷதங்கள் வேதங்களுக்கு முரண்பட்டன. அவை சமஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கப்பட்ட போது வேதத்திற்கு அனுசரணையான கருத்துகள் இடைச் செருகல்களாகப் புகுத்தப்பட்டன.

வேதங்கள், உபநிஷதங்கள், புத்த மதக் கோட் பாடுகள் ஆகியவை ஒன்றோடொன்று மோதி மக்களி டையே குழப்பத்தை ஏற்படுத்தியபோது, இந்து மதத் தின் விழுமிய எண்ணங்களுக்குத் தத்துவ ரீதியான வடிவம் கொடுத்து உருவாக்கி, அதை மக்களை ஏற்றுக் கொள்ளச் செய்து பெருவெற்றி கண்டவர், ஆதி சங்கரர்.

நசிக்கேதனைப் போலவே சிறு வயதிலிருந்து எதை யும் ஆராய்ந்து விவாதித்து முடிவு காணும் மன இயல்பு கொண்டவராய்ச் சங்கரர் விளங்கினார்.

இளம் பிராயத்திலேயே காஷாயம் பூண்டு துறவு வாழ்க்கையை மேற்கொள்ளச் சங்கரர் விரும்பினர். ஆனல், அவர் தாயார் அதை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார். ஒருநாள் தாயாரும் மகனும் ஒன்ருக ஆற்றுக்கு குளிக்கப் போனர்கள். முதலை ஒன்று திடீரென்று சங்கரரின் காலைப் பற்றிக்கொண்டது. தாயார் கூச்சல் போட்டார். 'நான் துறவறம் மேற்கொள்ள நீ ஒப்புக்கொண்டால் முதலை என்னை விட்டு விடும்' என்ருர் சங்கரர். மகனை இழக்கச் சம்மதமில்லாதவராய் அதற்கு அவர் உடனே சம்மதித்தார். முதலையும் அவரை விட்டுவிட்டது. உண்மையில் முதலை ரூபத்தில் வந்தது இறைவனே.

கி. பி. 778-லிருந்து 838-க்குள் அவர் வாழ்ந்திருக்க வேண்டுமென்று நவீன ஆராய்ச்சியாளர்கள் அனுமானிக்கிருர்கள். அவர் நிறைய நூல்களை எழுதியிருக்க வேண்டும். சில நூல்களைப் பிற்காலத்தில் மற்றவர்கள் எழுதி அவர் பெயரிலும் வெளியிட்டு இருக்கலாம்.

பகவத் கீதைக்கும் உபநிஷதங்களுக்கும் அவர் எழுதிய உரைகள் மிகச்சிறந்தவைகளாக இன்றைக்கும் மதிக்கப்படுகின்றன.

வேதங்களுக்கும் உபநிஷதங்களுக்கும் இடையே உள்ள முரண்பாட்டினைத் தீர்த்து விளக்கம் சொன்னவர் அவர்தான்.

அவர் பிராமணர். சிவனை வழிபட்டார். சிவ வழிபாடு என்கிற பெயரால் கபாலிகர்கள் என்கிற கூட்டத்தார், பல ஆபாசமான வழிப்பாட்டு முறைகளை அந்தக் காலத்தில் கையாண்டார்கள். சங்கரர் அவைகளைச்

கடுமையாகக் கண்டித்து, முறையான வழிபாட்டுமுறை என்னவென்று போதித்தார்.

சங்கரரைப்பற்றிக் கற்பனைக் கதை ஒன்று சொல்லப்படுவதுண்டு. மந்தனு எனப் பெயர் கொண்ட பண்டிதர் ஒருவர் இருந்தார். அவர் இளம் பிராயத்தினரான சங்கரரை விவாதத்திற்கு அழைத்தார். விவாதத்தில் யார் வெற்றி பெற்றுர் என்கிற முடிவைச் சொல்லும் பொறுப்பு மந்தனுவின் மனைவியிடம் ஒப்படைக்கப்பட்டது. விவாதத்தில் தொடர்ந்து தம் கணவர் தோற்றுக்கொண்டே வருவதைப் பார்த்த மந்தனுவின் மனைவி, சங்கரரை மடக்க எண்ணி, அவர் சிறுவராய் இருந்ததால், பால் உறவு பற்றிக் கேள்வி கேட்டாள். அவர் பதில் சொல்ல முடியாமல் திணறிப் போவார் என்கிற எண்ணத்தில் கேள்விகளைக் கேட்டாள். ஆனுல், சங்கரரோ தோற்பதாயில்லை. தாம் வழிபட்ட தெய்வத்தை வேண்டினுர். அரசரின் உடலில் அவர் குடி புகுந்தார். அரசரின் மனைவிகளோடும் அபிமானப் பெண்களோடும் வாழ்ந்து, பால் அறிவைப் பெற்று, மீண்டும சங்கரராகி விவாதத்தில் வெற்றி பெற்றுர். அவரது ஆற்றலைக் கண்டு பிரமித்த மந்தனுவும் அவர் மனைவியும் சங்கரரின் சீடர்கள் ஆனுர்கள்.

சங்கரரைப்பற்றி இப்படி ஏராளமான கற்பனைக் கதைகள் உண்டு. ஆனுல், அவர் கண்ட அத்துவைதம் இன்றைக்கும் வாழ்க்கையின் பல பிரச்சினைகளுக்குத் தீர்வு சொல்லிக்கொண்டிருக்கிறது.

ஆத்மன் என்பதும் பிரம்மன் என்பதும் ஒன்றுதான். இரண்டும் தோற்றத்தில்தான் வெவ்வேருகக் காட்சியளிக்கின்றன. பிரம்மத்தின் ஒரு பகுதிதான் ஆத்மாவாக இருந்து நம்மைச் செயல்படுத்திக்கொண்

டிருக்கிறது. ஆத்மாவும் பிரம்மனும் ஒன்றுதான் என்பதை உணர்ந்தவன் மனித வாழக்கையின் ரகசியங்களை அறிந்தவனுவான்.

இதுதான் சங்கரரின் உபதேசங்களின் சாரம். இன்றைய விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளை வைத்துப் பார்க்கும்போது, சங்கரரின் அத்துவைத தத்துவம் பல விஞ்ஞான உண்மைகளுக்கும் முன்னேடியாக இருப்பதை தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும்.

# 12. பகவத் கீதை

உலகமெங்கும் அறிமுகமாகியுள்ள இந்து மத நூல்களில் பகவத் கீதைக்குத் தனியான இடம் உண்டு. பகவத் கீதை என்னும்சொல்லுக்குக் 'கடவுளின் பாடல்' என்பது பொருள். இதன் தோற்றம் பற்றித் தெளி வான கருத்து எதுவுமில்லை. இதன் இலக்கிய அழகை அனைவரும் ஒருமனதாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். மகாபாரதத்தில், குருக்ஷேத்திரப் போர் நடைபெறும் போது, இந்தக் கீத உபதேசம் இடம் பெறுகிறது. பாரதத்தின் ஒரு பகுதியாகக் கீதை இருந்தாலும், பாரதத்திலிருந்து இது பல விஷயங்களிலும் ஒதுக்கி யிருந்து, கருத்துகளைச் சொல்லுகிறது. உலகத்தின் பலவேறு மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ள சிறப்பு, கீதைக்கு உண்டு. கீதை சங்கரரின் காலத் திற்கு முன்னால் தோன்றியது என்பதில் சந்தேகமில்லை. கீதையைச் சங்கரர் எழுதி இருக்கக்கூடும் என்று கருதுகிறவர்களும் இருக்கிறார்கள். போர்க்களத்திற்கு வந்த பிறகும் போர் புரிய மறுக்கும் அர்ஜுனன், ஏன் போர் செய்ய வேண்டும் என்று வற்புறுத்துவதற்காக, அவன் தேர்ச்சாரதியாகப் பொறுப்பேற்றுப் போர்க் களத்திற்கு வரும் கண்ணன் உபதேசிக்கும் உபதேச மொழிகளே கீதையாகும்.

கீதை பல யோகங்களைச் சொல்லுகிறது. அவற்றுள் அது குறிப்பாகச் சொல்லுவது நிஷ்காம கர்ம யோகத்தைப்பற்றி. 'செயல் உன்னுடையது. பலனைப்பற்றிக் கவலைப்படாதே' என்கிறது கீதை.

'வழி காட்டும் கீதை' என்று தனியாகவே நான் ஒரு விரிவான நூல் எழுதியிருப்பதால், அதுபற்றி மேற்கொண்டு விளக்கம் எதுவும் இங்கு எழுதவில்லை.

கீதையைப் படித்தால் இந்து மதத்தின் ஆதார எண்ணங்களை உள்ளடக்கிய உபநிஷதங்களின் கருத்தையும் புரிந்துகொண்டதாக ஆகிவிடும்.

# 13. தாந்திரிகம்

தாந்திரிகம் (Tantrism) இந்து மதத்தின் ஒரு முக்கியப் பகுதியாக விளங்கிய காலம் ஒன்று இருந்தது. தாந்திரிகர்களுடைய வழிபாட்டு முறையே ஆபாசமானது என்று கருதியவர்களும், கருதுகிறவர்களும் இருக்கிறார்கள். மனத்தை ஒருவழிப்படுத்தும் நிலையை இந்து மதம் யோகம் என்று சொல்லுகிறது. தாந்திரிகர்கள் தங்கள் வழிபாட்டினையும் யோகத்தின் ஒரு பகுதியாகத்தான் கருதினார்கள். புத்த மதம் வீழ்ச்சியடைந்த போது தாந்திரிகம் செல்வாக்குப் பெற்றதாகச் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

சிவன், விஷ்ணு, கிருஷ்ணன் ஆகிய தெய்வங்களை இந்துக்கள் வழிபட்டார்கள். தாந்திரிக மதம் வழிபாட்டிற்கு ஸ்லோகங்களை வைத்திருந்தது. இவர்கள் ஆண் கடவுள்களை பூஜிப்பதில்லை; பெண் கடவுள்களையே வழிபட்டார்கள்.

கடவுளை அன்னையாகக் கருதி வழிபட்டவர்கள் இவர்கள். அன்னையின் மடியில் தலை வைத்துப் படுக்க வேண்டும் என்பது இவர்களுடைய பிரார்த்தனைப் பாடல்களுள் ஒன்று. தாந்திரிக மதத்திற்குரியவர்

கள், அன்னையின் மார்பகங்களில் பால் பருக வேண்டு மென்று வேண்டுதல் செய்கின்றவர்கள்.

தாந்திரிகன் தியானத்தில் நம்பிக்கையுடையவன். ஏதாவது பொருளின்மீது முழுமையான கவனம் வைத் தால் மனத்தை ஒருநிலைப்படுத்திவிடலாம் என்பது இவனது நம்பிக்கை. ஒரு பெண்ணின் பிறப்பு உறுப்பே இந்தக் கவனத்திற்கு மிகவும் பாத்திர மானது என்பது தாந்திரிகர்களின் நம்பிக்கை. எனவே, அதையே சின்னமாக வைத்து இவர்கள் தியானத்தில் ஈடுபடுவது வழக்கம். அவ்வாறு தியானத்தில் ஈடுபடும் போது, பெண்ணை ஆண் ஊடுருவும் நிகழ்ச்சியை இவர் கள் மனத்தில் கவனப்படுத்திக்கொண்டு தியானத்தில் ஈடுபடுவது பழக்கம். இவர்களைப் பொறுத்த வரையில் ஆண்—பெண் உடலுறவை ஆபாசமாகக் கருதுவ தில்லை. இவர்களுக்கு ஆண்—பெண் சேர்க்கை வழி பாட்டிற்குரியதாகும்.

உன்னதமான தெய்விக நிலையைப் பெண்ணோடு உடலுறவு கொள்ளும் போதுதான் அனுபவிக்க முடி யும் என்பது இவர்களின் கோட்பாடு. ஆணும் பெண் ணும் களைத்துப் போகும் வரை உடலுறவு கொண்டு மன நிம்மதி பெறுகின்ற போதுதான் தெய்வத்தை உணரும் மனநிலையை அடைகிறார்கள் என்பது இவர் களின் கோட்பாடு. ஆகவே, இவர்கள் செக்ஸ் இன்பம் அனுபவிப்பதை உயர்ந்த தெய்விக அனுபவமாகவே எண்ணிச் செயல்பட்டார்கள். இதுவரையில் இவர் களுடைய கோட்பாட்டில் குழப்பம் எதுவுமில்லை. ஆனால், போகப்போக, இவர்களின் தத்துவம் பல்வேறு விபரீத பரிணாமங்களைப் பெற்றது. ஓர் ஆண் பக்தன் முழுமையான பக்தி நிலையை அடைய வேண்டுமென்

ருல், தன்னை ஒரு பெண்ணாகவே நினைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டும் என்று சொன்னார்கள். அவன் பெண்ணைப் போலவே நடக்கவேண்டும், பேச வேண்டும். அவளைப் போலவே உணர்ச்சிகளை மாற்றிக் கொள்ளவேண்டும், உடை உடுத்த வேண்டும் என்றெல் லாம் சொல்ல ஆரம்பித்தார்கள். சில ஆண்கள் இயற்கையிலேயே பெண்மைக்குணம் கொண்டவர் களாய் இருப்பார்கள். இவர்களைத் தெய்விகமானவர்கள் என்றும், வழிபாட்டிற்குரியவர்கள் என்றும் தாந்திரிகர் கள் சொல்லத் தொடங்கினார்கள். இப்படிப்பட்ட ஆண்களோடுகூட உடலுறவு வைத்துக்கொண்டு தெய்விக உணர்ச்சியை அனுபவிக்க முடியும் என்று இவர்கள் சொன்னார்கள். ஆணும் பெண்ணும் உட லுறவு கொள்ளுவதை இவர்கள் ஒரு தெய்விகக் காரிய மாக எண்ணினார்கள். அந்த உறவினை என்னென்ன வழிகளில் கொள்ள முடியுமோ அந்த வழிகளிலெல்லாம் செய்து பார்த்துப் பெறும் அனுபவங்களைத் தெய்விக அனுபவங்களாக இவர்கள் கருதினார்கள். கோயில் சிற்பங்களில் கண்ட உடல் உறவுக் காட்சிகளைக் கோவில் அரங்கத்திலேயே செய்து பார்ப்பதும் ஒரு தெய்விகக் காரியம் என்று இவர்கள் கருதினார்கள்.

இது போலச் சராசரி மனிதன் ஆபாசமென்று ஒதுக்கித் தள்ளிடும் அல்லது ஒதுக்கி இருக்கும் எத் தனையோ செக்ஸ் விஷயங்களை, இவர்கள் புனிதமான வையாக உள்ளபடியே நம்பி நடைமுறையில் கைக் கொண்டார்கள்.

தாந்திரிக வழிபாட்டு முறையே கேவலமானது என்றோ, வக்கரித்த உணர்ச்சி கொண்டவர்களின் பழக்க வழக்கங்கள் என்றோ அலட்சியப்படுத்துவதற் கில்லை.

ஆனால், இத்தகைய நடவடிக்கைகளால் மனிதன் அசாதாரணமான அதிசயங்கள் நிகழ்த்தும் மந்திர சக்தியைப் பெறமுடியும் என்று இவர்கள் சொல்லத் தொடங்கியபோது, தாந்திரிக வழிபாட்டு முறை தடம் புரண்டு செல்லத் தொடங்கியது.

இம்மாதிரி பல்வேறு அனுபவங்களைப் பெற்றுத் தங்களைத் தெய்விக சக்தி படைத்தவர்களாக ஆக்கிக் கொண்டவர்கள் சாதகர்கள் என்று வழங்கப்பட்டார்கள். சாதகத்தில் முழுமை பெற்று வெற்றி கண்டவர்கள் சாதுக்கள் என்று வழங்கப்பட்டார்கள்.

தாந்திரிகர்கள் மட்டுமல்ல, இந்துமதத்தில் பல்வேறு சாதனை புரிந்த சாதுக்களும் இருக்கவே செய்கிறார்கள். சாதாரண உலோகத்தைத் தங்கமாக மாற்றும் ரசவாத வித்தை புரிகிறவர்களும் இருந்தார்கள். பூமியிலிருந்து பல அடி உயரத்திற்கு உடலை மேலே கொண்டுசெல்லும் சித்தர்களும் இருந்தார்கள். இப்படிப்பட்ட சித்தர்கள் ஆண்மை மிக்கவர்களாகவும் பெண்ணுக்கு உடல் திருப்தி ஏற்படுத்துவதில் வல்லவர்களாகவும் இருந்தார்கள்.

யோகங்களில் மற்றொரு பெரிய யோகம் குண்டலினி யோகமாகும். அதாவது, நரம்பு மண்டலத்தின் முக்கியமான பகுதியான தண்டுவடத்தில் பெரிய சக்தி உறங்குகிறது என்றும், இந்த யோகத்தின் மூலமாக அந்தச் சக்தியை வெளிப்படுத்தி மனிதன் தனக்குப் பயன்படுத்திக்கொள்ள முடியும் என்றும் சொல்லப்படுகிறது.

உறங்கிக் கிடக்கும் இந்த ஆற்றலை யோகத்தின் மூலமாகச் சிறிது சிறிதாக விழிப்புக்கொள்ளச் செய்ய

முடியும். இந்த யோகத்தைப் பயிலுகின்றவர்கள் இந்த சாதனையைத் தெளிவாகவே உணரமுடியும் என்றும் சொல்லுகிறார்கள்.

இந்தச் சக்தி விழிப்புக் கொள்ளும் போது தோள் எரிவது போன்ற உணர்ச்சி தோன்றும் என்றும், உடலெல்லாம் வியர்க்கும் என்றும், ஏதோ ஒரு ஜந்து முள்தண்டின்மீது ஊர்ந்து செல்லுவது போலத் தோன்றும் என்றும் சொல்லுகிறார்கள். இந்தச் சக்தியை விழிப்புக்கொள்ளச் செய்துவிட்டால் மனிதன் எந்தக் கஷ்டமான காரியத்தையும் சுலபத்தில் செய்து கொள்ளும் ஆற்றலைப் பெற்றுவிடுகிறான்.

ஆனால், தாந்திரிகர்கள் போகத்தின் மூலமாக, அதாவது செக்ஸ் இன்பத்தை முழுமையாக அனுபவிப் பதன் மூலமாக, இந்த யோக நிலையைப் பெற முடியும் என்று சொல்லுகிறார்கள்.

செக்ஸ் உறவில் ஆபாசமான வார்த்தைகளைப் பயன்படுத்துவதையும் தாந்திரிகர்கள் அனுமதித் தார்கள். இது, செக்ஸ் இன்பத்தை அதிகப்படுத்தும் என்றும் சொன்னார்கள்.

இப்போது தாந்திரிக வழிபாட்டு முறை அங் கொன்றும் இங்கொன்றுமாக இந்தியாவில் சில இடங் களில் இருக்கிறது. சில தீவிர முறைகளை வேண்டு மானால் இன்றைக்கு நாம் ஏற்றுக்கொள்ளாமல் இருக்க லாமே தவிர, சிறிது காலத்திற்கு முன்வரை பூனாவில் ஆசிரமம் நடத்தி, இப்போது அமெரிக்காவில் ஓரேகான் என்னுமிடத்தில் ஆசிரமம் நடத்தி வரும் ரஜினிஷ் சாமியார், இதே முறைகளைத்தான் கையாண்டார் என் பதை நாம் மறந்துவிடுவதற்கில்லை.

## 14. யோகம்

யோகம் என்கிற சொல்லுக்குப் ‘பாடத்திட்டம்’ என்பது பொருள். குறிப்பிட்ட அறிவு நிலையைப் பெறுவதற்காகப் பயிலப்படுவது என்று வேண்டுமானுல் கொள்ளலாம். மனிதன் இருக்கும் நிலைக்கும் அவன் அடைய விரும்பும் நிலைக்கும் பாலமாக அமைவது யோகமாகும்.

இந்து மதச் சிந்தனையாளர்கள் பலவிதமான யோகங்களைப்பற்றிச் சொல்லி இருக்கிருர்கள். மனத்தை ஒருநிலைப்படுத்துவது யோகமாகும்.

மனத்தை ஒருநிலைப்படுத்த, அதாவது யோகம் பயிலத் தனிமை தேவைப்படுகிறது. இந்தத் தனிமை ஜன சந்தடியற்ற இடங்களில், அதாவது ஆரண்யங்களில் சுலபமாகக் கிடைக்கும். பண்டைக் கால ரிஷிகள் தபோவனங்களில் யோகம் பயின்ருர்கள். ஆனுல் யோகப் பயிற்சியில் வளர்ச்சியடையும் போது, ஒருவன் ஜனசந்தடி மத்தியில்கூடத் தன்னைத் தனிமைப் படுத்திக்கொண்டுவிட முடியும்.

வேத காலத்திற்கு முன்பு இருந்தேகூட யோகம் பயின்று வந்திருக்கிருர்கள். உடலை இச்சைப்படி செயல்படுத்தும்ஆற்றலைச் சித்தி என்று சொன்னுர்கள்.

உபநிஷத காலச் சிந்தனையாளர் இந்தச் சித்திகளில் நம்பிக்கையில்லாதவர்களாய் இருந்தார்கள். மனத்தைத் தூய்மைப்படுத்தவும் ஆற்றலை வளர்த்துக்கொள்ளவும் அவர்கள் யோகம் பயின்றார்களே தவிர, மந்திர சக்திகளை வளர்த்துக்கொள்ளும் நோக்கத்தோடு அவர்கள் யோகம் பயிலவில்லை. யோகத்தின் உயர்நிலையாகக் கருதப்படுவது உடலையும் மனத்தையும் மறந்த நிலையாகும்.

ஹட யோகம் மேலை நாடுகளில் மிகுந்த செல்வாக்குடன் விளங்குகிறது. அவர்களுக்கு அதிலுள்ள உடற் பயிற்சி மிகவும் பிடித்திருக்கிறது. ஹட யோகம் கடுமையான உடல் உழைப்பைக் கொண்டது.

யோகம் என்பது மதத்தை அடிப்படையாகக் கொண்டது என்று எண்ண வேண்டியதில்லை. பழங்கால சிந்தனையாளர்கள் யோகம் பயிலுவதை வாழ்க்கையின் முக்கிய நிலையாகக் கொண்டு, படைப்பு பற்றிய தங்கள் எண்ணங்களையும் வெளியிட்டதால், யோகம் என்பது மதம், கடவுள் ஆகியவற்றோடு நெருக்கமான தொடர்புடைய விஷயம் போலக் கருதப் படலாயிற்று.

உடலின் உறுப்புகளை ஒருங்கிணைந்த நிலையில் வைத்துக்கொள்ள ஹட யோகம் பேருதவியாய் இருக்கிறது.

மூச்சை அடக்குவது ஹட யோகத்தில் ஒரு நிலை. மூச்சடக்கி யோகம் இயற்றுவதைப்பற்றிப் பதஞ்சலி விரிவாகவே சொல்லியிருக்கிறார். மூச்சை அடக்குவது உடலின் இதர உறுப்புகளை செம்மையாகச் செயல் பட வைக்கிறது. சுவாச உறுப்புகள் போன்றவை

இதனுல் தூய்மையடைகின்றன. இதனுல் உடலின் அனைத்து உறுப்புகளும் சிறப்பாகச் செயல்படும் நிலை தோன்றுகிறது.

அமைதியாக இருந்து மனத்தை ஒருநிலைப்படுத்த இந்து மத ஆன்ருேர்கள் கண்ட வழி 'ஓம்' என்னும் சொல்லை உச்சரிப்பதுதான்.

கீதை ராஜயோகம், பக்தி யோகம், கர்ம யோகம் என்று பலவிதமான யோகங்களைப்பற்றிப் பேசுகிறது. கீதையை ஆழமாகப் பயின்ருல் இந்த யோகங்களைப் பற்றிய முழுமையான கருத்துகளையும் அறிய முடியும்.

இந்த அத்தியாயத்தில் சொல்லியுள்ளவை யோகங்களின் முழுமையான விளக்கமாகா. இந்து மத வளர்ச்சியில் யோகம் வகித்து வந்துள்ள முக்கியப் பங்கினை விளக்குவதற்காகவே அது பற்றி மேலெழுந்த வாரியான ஒரு கண்ணேட்டத்தை இங்கே கொடுத்துள்ளேன். விரிவாகத் தெரிந்துகொள்ள விரும்புவோர் அதுபற்றிய முழுமையான விவரங்கள் அடங்கிய நூல்களைப் பயில்வது பயனுடையதாக இருக்கும்.

# 15. தாக்குப்பிடித்த இந்து மதம்

இந்து மதத்தின் அஸ்திவாரத்தை எவராலும் அசைக்க முடிந்ததில்லை. வேதங்கள் உருப்பெற்றன. உபநிஷதங்கள் வளர்ச்சிக்கு வழிகாட்டின. சங்கரர், ராமானுஜர், மத்துவர் போன்ற மதாச்சாரியர்கள் இந்து மதத்தின் பல்வேறு நிலைகளையும் விளக்கி, மக்கள் எளிமையாகப் புரிந்து ஏற்றுக்கொள்ளும் வடிவ அமைப்பைக் கொடுத்தார்கள்.

உபநிஷதங்கள், புத்தரின் போதனைகள் வேதங்களிலிருந்து மாறுபட்ட போதிலும் இந்து சமூக அமைப்பு அவைகளை ஏற்றுத் தன்னுள் ஜீரணித்துக் கொண்டது.

இந்து மதத்தில் வர்ணாசிரம அமைப்பைப் பயன் படுத்திப் பிராமணர்கள் தங்கள் மேலாதிக்கத்தை நிலைக்க வைத்துக்கொண்டார்கள் என்பதில் சந்தேக மில்லை. எல்லா பிராமணர்களுமே இப்படித்தான் இருந் தார்கள் என்று சொல்லிவிட முடியாது. வேதங்களைப் பயின்றார்கள். உபநிஷதங்களை ஆராய்ந்தார்கள். முரண்பாடுகளுக்கு விளக்கம் சொன்னார்கள். தங்களின் மேலாதிக்கம் நிலைக்கவேண்டுமென அக்கறை காட்டிய தோடு மட்டுமல்லாமல், கீதை போன்ற நூல்களையும் சங்கரரின் உபதேசங்களையும் தெளிவாகப் பயின்று,

இந்து மதத்தைச் செம்மையான வாழ்க்கைநெறி ஆக்கு வதிலும் மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டார்கள்.

வருணாஸ்சிரம முறையில் அமைந்த ஜாதிப் பாகு பாடுகள் காலப்போக்கில் பல தீமைகளுக்கு இடமளித் திருந்தாலும், ஒரு குறிப்பிட்ட கால கட்டம் வரை சமூ கக் கட்டுக்கோப்பு உறுதியாக அமைவதற்கு அது உதவியது என்பதை எவரும் மறுத்துவிட முடியாது.

இஸ்லாமியப் படையெடுப்பு நிகழ்ந்தது. உருவ வழிபாட்டைக் கடுமையாக எதிர்த்தவர்கள் இஸ்லாமி யர்கள். படையெடுத்த இஸ்லாமிய மன்னர்களால் இந்துக் கோவில்களை இடிக்க முடிந்ததே தவிர, சிலை களை உடைக்க முடிந்ததே தவிர, இந்துக்களிடம் பெரிய மனமாற்றத்தை அவர்களால் ஏற்படுத்த முடிய வில்லை.

சில இஸ்லாமிய மன்னர்கள் வாளைக் காட்டிப் பய முறுத்தி மத மாற்றம் செய்தார்கள். இந்துக்கள்மீது தனியாக வரி விதித்து, அவர்களைத் தொல்லைப்படுத்தி மத மாற்றம் செய்ய முயன்றார்கள். இவையெல்லாம் சிறிது காலம்வரை ஏதோ பெரிய காரிய சாதனை போல் தோன்றினவே தவிர, பெரும்பான்மையான இந் துக்கள் எத்தனையோ சோதனைகளுக்கு மத்தியிலும் இந்துக்களாகவே இருந்தார்கள்.

இஸ்லாமிய மன்னர்களுள் அக்பர் விதி விலக்காக இருந்தார். இந்துப் பெண்களை விரும்பி அவர் திரு மணம் செய்துகொண்டார். இந்து மத குருமார்களை யும் இஸ்லாமிய மௌல்விகளையும் அழைத்து, மதம் பற்றி விவாதிக்க வைத்து, உண்மைகளை தெரிந்து கொள்ள முயன்றார். இந்தியாவிற்கு வந்த கிறிஸ்துவ

மத குருமார்களேயும் இந்த விவாதங்களில் கலந்து கொள்ள வைத்தார். எல்லா மதங்களேப்பற்றியும் அறிந்துகொண்ட அவர், சமரச நெறியில் ஆட்சி செய்ய முயன்ருர்.

பின்னர் வந்த ஆங்கிலேயர்கள், கிறிஸ்துவ மத குருமார்கள் மூலம் அந்த மதத்தைப் பரப்ப முயன்ருர் கள். இஸ்லாமியர்கள் பயமுறுத்திஞர்கள். கிறிஸ்து வர்கள் ஆசை காட்டிஞர்கள். ஆஞலும், பெரும் பான்மை இந்துக்கள் இந்துக்களாகவே வாழ்ந்தார்கள் என்பது இந்து மதத்தின் வலிமைக்கும் ஜீவ சக்திக்கும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இந்து மதத்தில ஒதுக்கப்பட்ட சாதியினரைத் தான் ஆங்கில மத குருமார்களால் கிறிஸ்துவ மதத் திற்கு மாற்ற முடிந்தது. இந்து மதம் அவர்களே ஒதுக்கி வைத்ததன் பலனே அனுபவித்தது.

இந்து மதத்தின் நடைமுறை பலவீனங்களே உணர்ந்த மேல் நாட்டுக் கல்வி பயின்றவர்கள், ‘பிரம்ம சமாஜ்’ என்கிற அமைப்பைக் கண்டார்கள். இந்த அமைப்பு எதிர்பார்த்த அளவுக்கு வெற்றியைப் பெற வில்லே. ஆனல், பிரம்ம சமாஜத்தினர் ஆங்கிலக் கல்வி பயின்றவர்களாக இருந்ததால் உபநிஷத கருத்து களேயும் இந்து மதத்தின் ஆன்மிகக் கருத்துகளே யும் ஆங்கில மொழியில் சொல்லத் தொடங்கிஞர்கள். மேலே நாட்டினர் இந்து மதத்தின் ஆழமான கருத்து களேத் தெரிந்துகொள்ளுவதற்குக் கதவுகளேத் திறந்து வைத்ததன் பெருமை பிரம்ம சமாஜத்தையே சாரும்.

# 16. இராமகிருஷ்ணர்

பிரம்ம சமாஜக்காரர்கள் இந்து மதத்தில் பல சீர்திருத்தங்களைச் செய்ய முயன்றார்கள். குழந்தைத் திருமணங்கள் இந்து மதத்தில் சர்வ சாதாரணமாய் நிகழ்ந்துகொண்டிருந்தது. இதை ஒழிக்க அவர்கள் முயன்றார்கள். அது போலவே சாதி பேதங்கள் இல்லாமல் செய்யப் பிரயத்தங்களை மேற்கொண்டார்கள். சிலை வழிபாட்டிற்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்பினார்கள்.

அவர்களுக்குத் தியானத்தில் நம்பிக்கையுண்டு. தனிப்பட்ட எந்தத் தெய்வத்தையும் வழிபட அவர்கள் விரும்பவில்லை. இவர்களில் ஒரு கோஷ்டியினர், கல்கத்தாவில் ஓர் இடத்தில் அமர்ந்து, தியானம் செய்வது வழக்கம். அந்தக் கூட்டத்தில், இடுப்பில் ஒரு வேஷ்டி மட்டும் கட்டிக்கொண்டு மேலே துணியில்லாமல், சவரம் செய்யாத முகத்துடன் ஒருவர் வந்து அமருவார்.

தோற்றத்தில் மட்டுமல்லாமல் பேச்சிலும் அவர் குடியானவனைப் போலவே இருந்தார். படித்தவர்களின் மத்தியில் அவர் அமர்ந்திருந்தாலும், அவர் சொன்ன

விஷயங்கள் அறிவுத் தெளிவுடனும் சிந்திக்கத் தக்கவையாகவும் இருந்தன.

ஒரு நாள், அந்தக் கூட்டம் தியானம் செய்து விட்டு எழுந்தபோது, குடியானவர் போலத் தோற்றம் கொண்ட அந்தப் பெரியவர் பிரம்ம சமாஜி ஒருவரைப் பார்த்துச் சொன்னார்: "நீங்கள் எல்லோரும் தியானம் செய்வதை நான் தினமும் பார்த்துக்கொண்டிருக் கிறேன். அப்போது எனக்கு என்ன நினைவுக்கு வரு கிறது தெரியுமா? நான் வசிக்கும் தட்சணேஸ்வரத்தில் குரங்குக் கூட்டங்கள் இப்படித்தான் மரத்தினிடையே அமைதியாக உட்கார்ந்திருக்கும். பார்த்தால், ஏதும் அறியாத சாதுக்களைப் போல் அந்தக் குரங்குகள் இருக் கும். ஆனால், அவை எந்தத் தோட்டத்தில் என்ன பழம் கிடைக்கும், வாழைத் தோட்டத்திற்குப் போனால் பழுத்த பழம் கிடைக்குமா என்று எண்ணிக்கொண்டே இருக்கும். திடீரென்று கத்திக்கொண்டு வயிற்றை நிரப்புவதற்கு அவை விழுந்தடித்துக்கொண்டு ஓடும். உங்களுள் பலரும் அவ்வாறுதான் தியானத்தில் அமர்ந் திருந்தீர்கள்."

அவர் கூறியதைக் கேட்ட பிரம்ம சமாஜி சிரித் தார்.

குடியானவர் போலத் தோற்றமளித்த அந்த மகான்தான் இராமகிருஷ்ண பரமஹம்சர். இந்து மதத்தில் பெரிய மறுமலர்ச்சி ஏற்படுவதற்குக் காரண மாய் இருந்தவரும் அவரே.

1836-ம் ஆண்டு இராமகிருஷ்ண பரமஹம்சர் சிறிய கிராமத்தில் பிறந்தார். அவர் பெற்றோர்கள் சாதாரண விவசாயிகள். அவர் மூத்த சகோதரர் தட்சணேஸ்

வரத்திலிருந்த காளிகோவிலில் பூசாரியாக வேலை பார்த்தார். இராமகிருஷ்ணர் பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்.

ஏழாவது வயதில் அவர் காக்காய் வலிப்பு நோய்க்கு ஆளானார். திடீரென்று அவர் மயங்கி விழுந்தால் மூர்ச்சை தெளிய வெகுநேரம் ஆகிவிடும். அடிக்கடி இம்மாதிரி மயக்கத்திற்கு அவர் ஆளானது உண்டு.

ஒரு நாள் அவரது கிராமத்தில் ஒரு பண்டிகை நடந்தது. அப்போது அங்கிருந்த சிறுவர்கள் புராண நாடகம் ஒன்றை நடித்தார்கள். சிவனாக நடித்த பைய னுக்குத் திடீரென்று உடல்நிலை சரியில்லாமல் போய் விட்டது. இராமகிருஷ்ணர் அந்தப் பாத்திரத்தில் நடிக்க வேண்டுமென்று கிராமத்தார்கள் விரும்பினார் கள். இராமகிருஷ்ணர் மறுத்தார். கிராமத்தார் விட வில்லை. கடைசியில் இராமகிருஷ்ணர் சிவன் வேடம் போட்டார். அந்தத் தோற்றம் அவருக்கு அப்படியே பொருந்தியிருந்தது. அவர் கண்களில் தெய்விக ஒளி வீசியது. அவர் அப்படியே நின்றுகொண்டிருந்தார். கூட்டத்தினருக்கு ஒன்றும் புரியவில்லை. கூச்சல் போட்டார்கள். அவர்மீது தண்ணீரைக் கொட்டினார் கள். அப்போதும் அவர் அசையவில்லை. நாடகம் அத்துடன் நின்று போயிற்று. மேடையிலிருந்தவரைத் தூக்கிச் சென்றார்கள். மீண்டும் அவர் சுய நினைவு அடையப் பல மணி நேரமாயிற்று.

சகோதரரின் கீழே அவரையும் காளி கோவில் பூசாரி ஆக்குவதென்று கிராமத்தார் முடிவு செய்தார் கள். காளியிடம் அவர் காட்டிய பக்தி பிரமிக்கத் தக்கதாக இருந்தது. நீண்ட நேரம் காளி சிலையின் முன்னால் மெய்ம்மறந்து வீற்றிருப்பார். கண்ணீர்

ஆருகப் பொழியும். குழந்தை தாயிடம் எவ்வாறு அன்பு காட்டுமோ, அது போல, இராமகிருஷ்ணர் காளியிடம் பக்தி செலுத்தினுர்.

சிலர் இராமகிருஷ்ணரைப் பைத்தியக்காரர் என்று எண்ணினுர்கள். ஆனுல், இராமகிருஷ்ணரோ காளியே தமக்குத் தரிசனம் தந்ததாகப் பேரானந்தம் அடைந்தார். பன்னிரண்டு ஆண்டுகள் இராமகிருஷ்ணர் துறவியாகி அங்கும் இங்கும் அலேந்தார்.

அப்போது ஒரு சந்நியாசினியைச் சந்தித்தார். அவள் தாந்திரிக மார்க்கத்தில் நம்பிக்கை கொண்டவள். அவள் அவரை அழைத்துப்போய் உடல் உறவு கொண்டு செக்ஸ் இன்பத்தை அவருக்குக் கற்றுக் கொடுத்தாள். பின்னர் இதுபற்றி ஒரு மகானிடம் அவர் குறிப்பிட்டபோது, அந்த மகான் தாந்திரிக முறைகளே வெறுத்துப் பேசினுர். உடனே இராமகிருஷ்ணர் "ஒரு வீட்டுக்குள் நுழைய எத்தனேயோ கதவுகள் உள்ளன. தோட்டி நுழைவதற்கும் ஒரு கதவு இருக்கிறது. அதன் வழியாகவும் வீட்டிற்குள் நுழையலாம். அதைப் போல இந்து மதத்தில் தாந்திரிக வழியும் ஒரு வழி. அதை வெறுக்கவேண்டிய அவசியமில்லே" என்று இராமகிருஷ்ணர் பதில் சொன்னுர்.

வயது ஏற ஏற இராமகிருஷ்ணர் பழுத்த ஞானியானுர். அவருக்குப் பெற்றோர்கள் திருமணம் செய்து வைத்தார்கள். அந்தப் பெண்ணே குழந்தைப் பிராயத்தைத் தாண்டாதவர். அவளுக்கு வயது வந்த பிறகுங்கூட அவளோடு அவர் தாம்பத்திய உறவு கொண்டு வாழ்ந்ததில்லே. வெறும் ஆன்மிக உறவில் விளேந்த திருமணமாகவே அது இருந்தது.

இராமகிருஷ்ணர் தட்சணேஸ்வரத்தில் ஒரு நிர்வாண சாதுவைச் சந்தித்தார். அந்தச் சாது உபநிஷதங்களில் கரை கண்டவர். அவர் இராமகிருஷ்ணரைப் பார்த்துக் கேட்டார், "வேதாந்தத்தை நீ தெரிந்துகொள்ள விரும்புகிருயா?" என்று.

இராமகிருஷ்ணர் பளிச்சென்று பதில் சொன்னுர்: "அன்னே காளி அனுமதித்தால் தெரிந்துகொள்ளுவேன்"

சாது, "அப்படியானுல் அன்னேயைக் கேட்டு விட்டு வா" என்ருர்.

இராமகிருஷ்ணர் நேராகக் காளி கோயிலுக்குச் சென்ருர். கோவிலிலிருந்து வெளியே வந்த போது, "அன்னே அனுமதி கொடுத்துவிட்டாள். எனக்கு வேதாந்தத்தைப் போதிப்பதற்காகவே அவர் வந்திருக்கிருர்" என்ருர்.

அந்தச் சாதுவின் பெயர் தோட்டா. காளி காட்சி தருவது, உத்தரவு தருவது ஆகியவற்றில் அவருக்குக் கொஞ்சமும் நம்பிக்கை இல்லே. இராமகிருஷ்ணரின் அறியாமையைப் பார்த்து அவர் அனுதாபப்பட்டார். அந்தச் சாது, "நீ முதலில் பிராமணஞக இருப்பதிலிருந்து விடுபடவேண்டும்" என்ருர். இராமகிருஷ்ணர் ஒப்புக்கொண்டார்.

அன்றிரவே இராமகிருஷ்ணர் பூணூலே கழற்றி எறிந்துவிட்டுத் தம் குடுமியையும் மழுங்கச் சிரைத்துக்கொண்டார். அதுவரையில் இராமகிருஷ்ணருக்கு இருந்த பெயர் கடாதரர். அந்தச் சாது தோட்டா அப்போதிலிருந்து அவர் பெயரை இராமகிருஷ்ணர் என்று மாற்றினுர்.

இராமகிருஷ்ணர் மெய்ஞ்ஞானி ஆகிவிட்டார். அத்துவைத சித்தாந்தத்தில் அழுத்தமான நம்பிக்கை கொண்டவர் ஆனார். கடவுளும் மனிதனும் வெவ் வேறான விஷயங்கள் அல்ல. பரபிரம்மத்தின் இருவேறு நிலைகளே அவை என்கிற தெளிவு இராமகிருஷ்ண ருக்கு ஏற்பட்டது.

ஒரு சந்தர்ப்பத்தில் கிருஷ்ணனை வழிபட வேண்டு மென்று இராமகிருஷ்ணருக்குத் தோன்றிற்று. கிருஷ்ணன் கோபியரின் அன்புக்குப் பாத்திரமானவன் ஆனதால், இராமகிருஷ்ணர் ஒரு பெண்ணாகவே கிருஷ்ணனை வழிபட விரும்பினார். பட்டுச் சேலை உடுத்தித் தலையில் தலைமுடி அணிந்துகொண்டு, ஆபரணங்களையும் போட்டுக்கொண்டு, கிருஷ்ணனை வழிபடத் தொடங்கினார். அவரின் இந்தக் கோலத்தைப் பார்த்தவர்கள் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று எண்ணினார்கள். ஆனால் அவரோ, அந்தக் கோலத்தில் கண்ணனைத் தரிசிப்பதில் வெற்றி பெற்றார்.

அடுத்து அவருக்கு இராமனிடம் ஈடுபாடு ஏற் பட்டது. இராமரிடம் பக்தி கொண்ட அனுமான் அவர் நினைவுக்கு வந்தார். குரங்கைப் போலவே நடந்து பழகினார். தாவித் தாவி நடந்தார். பழங் களையும் கொட்டைகளையும் சாப்பிட்டுப் பழகினார். மரங்களில்ஏறி உட்கார்ந்துகொண்டு 'இராமா! இராமா!' என்று கூப்பிட்டுப் பழகினார். இந்த விஷயத்தை அவரே எடுத்துச் சொல்லியிருக்கிறார். ஆனால் இராம னின் தரிசனம் அவருக்குக் கிடைக்கவில்லை. சீதையின் தரிசனம் அவருக்குக கிடைத்தது. கண்ணெதிரிலேயே கண்டார்; திடீரென மயங்கி விழுந்தார்.

தினசரி முஸ்லிம் போல உடை உடுத்திக்கொண்டு ஐந்து முறை அல்லாவைத் தொழும் பழக்கத்தை இவர் ஏற்படுத்திக்கொண்டார். அதன் விளைவாக நபிகள் நாயகத்தை அவர் தரிசித்தார்.

கன்னி மேரியின் உருவத்தை வழிபட்டார். இதன் விளைவாக, கிறிஸ்துவ மத குருமார்கள் மாதா கோவில் களில் மெழுகுவத்திகளை ஏற்றுவது போன்ற காட்சி அவருக்குத் தோற்றமளித்தது. மூன்று தினங் களுக்குப் பின் உயரமும் அழகான தோற்றமும் வாய்ந்த ஏசுநாதரை அவர் தரிசித்தார். ஏசுநாதர் இராமகிருஷ்ணரின் உடலுக்குள் ஐக்கியமாவது போன்ற உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது.

இவையெல்லாம் இராமகிருஷ்ணரின் பெருமையை உயர்த்தும் விஷயங்கள் அல்ல. இந்து மதத்தின் ஆழமான கருத்துகளை எளிமையாக அவர் உப தேசித்த முறையும், குட்டிக் கதைகளின்மூலம் தத்துவ விஷயங்களைத் தெளிவாக எடுத்துச் சொன்ன அழகும், இந்தியாவிலிருந்த இலட்சக்கணக்கான இந்துக்களை அவர்பால் ஈடுபாடு கொள்ள வைத்தன. அவர் வாழ்ந்த காலத்தில் மட்டுமல்லாமல் சமாதி நிலையை அடைந்த பிறகும் அவர் உபதேசங்கள் இமயம் முதல் குமரி வரை இன்றைக்கும் பாரத தேசமெங்கும் எதிரொலித் துக்கொண்டிருக்கின்றன.

உலகைப்பற்றிக் கவலைப்படாத யோகியாக அவர் வாழ்ந்தார். தட்சணேஸ்வரத்தில் அவர் வாழ்ந்தபோது நடனக்காரப் பெண்மணி ஒருத்தி அவரிடம் அடிக்கடி வந்து பேசிக்கொண்டிருப்பாள். அவரும் நகைச்சுவைத் துணுக்குகள் பலவற்றை அவளுக்குச் சொல்லிச் சிரிக்க வைத்துக்கொண்டிருப்பார். அதைப் பார்த்த

சிலர், அந்தப் பெண்ணோடு இராமகிருஷ்ணருக்குத் தொடர்பு இருப்பதாகச் சந்தேகித்தார்கள். ஆனால், இம்மாதிரி வதந்திகளைப்பற்றி இராமகிருஷ்ணர் ஒரு போதும் கவலைப்பட்டதில்லை.

இராமகிருஷ்ணருக்கு நிறைய காணிக்கைகள் வரத் தொடங்கின. அவருக்கு முன்னால் நாடகக் காரர்கள் நடித்துக் காட்டுவார்கள். காணிக்கையாக வந்த பணம் அவருக்கருகில் குவித்து வைக்கப்பட் டிருக்கும். நாடகக்காரர்கள் அவரிடம் வெகுமதி கேட்டார்கள். நாடகத்தில் நடித்த ஒரு பெண்ணின் நடிப்பு அவருக்கு மிகவும் பிடித்துப் போயிருந்தது. குவிந்திருந்த காசுகள் அனைத்தையும் அவள் மடியில் கொட்டிவிட்டார். மற்றொரு நடிகருக்கு வெகுமதி கொடுக்க எண்ணிய போது அவரிடம் காசு எதுமில்லை. இடுப்பில் கட்டியிருந்த வேஷ்டியை அவிழ்த்து அந்த நாடகக்காரரிடம் கொடுத்தார்.

இராமகிருஷ்ணரின் புகழ் கல்கத்தா நகரமெங்கும் விரைவில் பரவியது. பிரபல கவிஞர் இரவீந்திர நாத் தாகூரின் தந்தையான தேவேந்திர நாத் தாகூர் இராமகிருஷ்ணரை ஒரு நாள் தம்முடைய வீட்டிற்கு விருந்திற்கு அழைத்தார். ஆனால் விருந்திற்கு வரும் இராமகிருஷ்ணர் இடுப்பில் வேஷ்டியோடு மட்டுமன்றி, மேலேயும் உடை அணிந்து வர வேண்டுமென்று விரும்பினார். ஆனால், தம்மிடம் இடுப்பு வேஷ்டியைத் தவிர வேறு துணி எதுவுமில்லை எனக் கூறி இராம கிருஷ்ணர் விருந்துக்கு வர மறுத்துவிட்டார்.

பல விஷயங்களில் இராமகிருஷ்ணர் ஒரு குழந்தை யைப்போல் இருந்தார். தம்கிராமத்துப் பாஷையில்தான்

பேசினார். அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. கிராமத்தில் பேசப்படும் ஆபாசமான வார்த்தைகளையும் அவர் சில சமயங்களில் உபயோகிப்பதுண்டு. மகான் என்றால் இப்படித்தான் இருப்பார் என்று முன் கூட்டியே கற்பனை செய்துகொண்டு அவரைத் தரிசிக்க வந்த மேட்டுக்குடியினர் சிலர், ஏமாற்றத் தோடு திரும்பிப் போனதும் உண்டு.

மந்திர தந்திரங்களில் அவருக்கு நம்பிக்கை இருந்த தில்லை. உபநிஷதங்கள் போதித்த ஆத்ம தரிசனத் தையே இராமகிருஷ்ணர் எளிய வார்த்தைகளில் போதித்தார்.

மகான் என்று அவர் அழைக்கப்பட்டாலும், எளிய மனிதராக வாழ்ந்து, எவருக்கும் புரியக்கூடிய எளிமை யான வார்த்தைகளில் உன்னதமான தத்துவத்தை உபதேசித்த சிறப்பு அவருக்கு உண்டு.

கடைசிக் காலத்தில் அவர் குரல் வளையில் அவருக்குப் புற்று நோய் தோன்றியது. கடுமையான உபாதையால் அவதிப்பட்டார். உண்ணவும் முடியா மல் பேசவும் முடியாமல் கஷ்டப்பட்டார்.

1886-ல் அவர் சமாதி நிலையை அடைந்தார். அவர் தத்துவங்களை உலகெங்கும் பரப்பி அவருடைய பெருமையை எல்லா நாடுகளிலும் பறை சாற்றிடும் பொறுப்பு அவர் பிரதம சீடரான ஸ்வாமி விவேகானந் தருக்குக் கிடைத்தது.

# 17. விவேகானந்தர்

சுவாமி விவேகானந்தரின் இயற்பெயர் நரேந்திரன். மேற்கத்திய நாடுகளிலும் இந்து மதத்தின் பெருமையை நிலை நாட்டியதில் அவருக்குச் சிறப்பான இடமுண்டு. 1863-ம் ஆண்டில், கல்கத்தாவில், ஒரு மத்திய வகுப்புக் குடும்பத்தில் பிறந்த அவர், 1902-ம் ஆண்டில் அதாவது, தம் முப்பத்தெட்டாவது வயதில் மறைந்தார்.

விவேகானந்தர் அழகான தோற்றமுள்ளவர். அவர் கண்கள், கவர்ச்சியான காந்தத்தைப் போன்றனவாம். மிகுந்த புத்திசாலி. சிறு வயதிலேயே தம் அறிவுத் திறமையைப் பல சந்தர்ப்பங்களில் வெளிப் படுத்தினார். ஆங்கிலக் கல்வியில் மோகம் கொண்டிருந்த அவர் பெற்றோர்கள் உயர்தரமான ஆங்கிலக் கல்வியை அவருக்கு அளித்தார்கள். ஆங்கிலம் பயின்றாரே தவிர அந்தக் கலாச்சாரத்திற்கு அவர் அடிமையாகவில்லை. அவர் சிந்தனை இந்திய மண்ணிலேயே வேரூன்றி இருந்தது. ஹெர்பர்ட் ஸ்பென்ஸர், ஜான் ஸ்டுவர்ட் மில் போன்றவர்களின் நூல்களை ஆழ்ந்து படித்தார்.

அவர்கள் இருவருமே சம்ஸயவாதிகள். கடவுள் இருக்கிறாரா என்பதைக் கேள்விக்குறியாக்கியவர்கள்.

மனித சமுதாயம் பூரணத்துவம் அடைய முடியும் என்கிற தத்துவத்தில் அழுத்தமான நம்பிக்கை கொண்டவர்கள்.

விவேகானந்தர் இவர்கள் தத்துவங்களை விரும்பிக் கற்ருர். பின்னர் மதத்தில் அவருக்கு ஈடுபாடு ஏற்பட்டது. அறிவாளிகள் நிரம்பி இருந்த பிரம்ம சமாஜத்தின் அங்கத்தினரானுர். ஆனுல், அந்த அமைப்பில் அவரால் திருப்தி காண முடியவில்லை.

இராமகிருஷ்ணரைப்பற்றிக் கேள்விப்பட்டு அவரைப்போய்ச் சந்தித்தார். விவேகானந்தரைப் பார்த்த மாத்திரத்திலேயே இராமகிருஷ்ணருக்கு அவரிடம் ஈடுபாடு ஏற்பட்டது; விவேகானந்தரின் கையைப் பற்றிக்கொண்டு அவர் விழிகளையே ஊடுருவிப் பார்த்தார். பின்னர் அவரைத் தனியாக அழைத்துப்போய்த் தம் கைகளாலே அவருக்கு இனிப்புகள் வழங்கினுர்.

விவேகானந்தர் அடிக்கடி வந்து இராமகிருஷ்ணரைப் பார்க்கலானுர். பல சமயங்களில் விவேகானந்தரைப் பார்த்த இராமகிருஷ்ணர் தியானத்தில் ஆழ்ந்து போவார். விவேகானந்தரைப் பார்க்க முடியாமல் போன சமயங்களில் அவரைப் பார்க்க முடியவில்லையே என இராமகிருஷ்ணர் கண்ணீர் விட்டு அழுவார்.

ஒரு முறை பிரம்ம சமாஜக் குழுவினருடன் விவேகானந்தர் கோஷ்டி கானம் பாடிக்கொண்டிருப்பதை இராமகிருஷ்ணர் கவனித்தார். அவரைப் பார்த்த மாத்திரத்தில் இராமகிருஷ்ணர் நினைவிழந்து மயக்கத்தில் ஆழ்ந்து போனுர். உடனே அங்கு பெரிய குழப்பம் ஏற்பட்டது. தம்மால் குழப்பம் ஏற்பட்டுவிட்

டதை உணர்ந்த விவேகானந்தர், கூட்டத்தை விலக்கிக்கொண்டு இராமகிருஷ்ணரிடம் ஓடி, அவரை வண்டியில் தூக்கிப் போட்டுக்கொண்டு இல்லத்திற்குச் சென்றூர்.

இராமகிருஷ்ணர் சுய நினைவு அடைந்தவுடன் விவேகானந்தர் அவரைக் கடுமையாகக் கோபித்துக் கொண்டார். ஆனுல், இராமகிருஷ்ணர் அதைப் பொருட்படுத்தவில்லே.

உபநிஷத தத்துவங்களே இராமகிருஷ்ணர் விவேகானந்தருக்கு உபதேசித்தார். விவேகானந்தர் குழம்பிப் போனுர். "நான் கடவுள், நீங்கள் கடவுள், பிறந்து இறந்து போகும் அனைத்தும் கடவுள் என்பது சுத்த அபத்தம்," என்று சீறினுர் விவேகானந்தர்.

"உபநிஷதங்களே இயற்றியவர்கள் பைத்தியக் காரர்கள். இல்லாவிட்டால் இவ்வளவு அபத்தமான விஷயங்களே அவர்கள் எவ்வாறு எழுதி இருக்க முடியும்" என்றுகேட்டார் விவேகானந்தர். ஆவேசமாக இராமகிருஷ்ணர் சொன்ன சமாதானங்களே விவேகானந்தரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லே. கடவுள் இருக்கிறுரா இல்லேயா என்பது பற்றிச் சந்தேகப் படுகிறவராக விவேகானந்தர் இருந்தார்.

ஒரு நாள் இராமகிருஷ்ணரிடம் "மாதா உன்னேப் பெரிய மேதை என்று சொல்லுகிறுள். அதை நான் அப்படியே ஏற்றுக்கொள்கிறேன்" என்றுர். மாதா என்று இராமகிருஷ்ணர் குறிப்பிட்டது காளியை. விவேகானந்தர் கேட்டார், "காளி சொன்னுள் என்று எப்படித் தெரியும்? விஞ்ஞானமும் தத்துவமும் புலன்கள் நம்மை ஏமாற்றிவிடும் என்று சொல்லு

கின்றன. எதன்மீது ஆசை வைத்திருக்கிறோமோ அதை நம்பத் தொடங்கிவிடுகிறோம். என்னை நீங்கள் நம்புகிறீர்கள். ஆகவே, என்னைப்பற்றி இப்படிப்பட்ட காட்சிகள் உங்களுக்குத் தோன்றுகின்றன. அவ்வளவு தான்'' என்று.

இராமகிருஷ்ணரின் கணக்கு உண்மையாகவே சரியாகிவிட்டது. உலகம் போற்றும் மிகப்பெரிய மனிதராக விவேகானந்தர் திகழ்ந்தார்.

விவேகானந்தரின் இளமைப் பருவமும் வாலிபப் பருவமும் வசதியில் கழிந்தன. அவர் தகப்பனார் தாராளமாகப் பணத்தைச் செலவழிக்கும் இயல்பு கொண்டவர். அவர் இறந்தபோது குடும்பத்திற்கு எதுவும் சேர்த்துவைக்கவில்லை என்பது மட்டுமல்ல, கடனாளியாக்கிவிட்டுக் கண்ணை மூடினார். குடும்பத் திற்காகச் சம்பாதிக்க வேண்டிய பொறுப்பு விவேகா னந்தரின் தலையில் விழுந்தது.

வேலை தேடித் தெருத்தெருவாக அலைந்தார்: எவரும் வேலை கொடுக்க முன்வரவில்லை. பணம் என்று வந்தால் எல்லோரும் பதுங்கிவிடுவார்கள் என்கிற உண்மை அவருக்குப் பளிச்சிட்டது. விவேகானந்தருக்கு வேலை வாங்கித் தர இராமகிருஷ்ணருக்குச் செல்வாக்கிருந்தும் முயற்சி எதையும் மேற்கொள்ளவில்லை. ஒருவேளை, விவேகானந்தர் உத்தியோகத்திற்குப் போனால் தம்மை விட்டு விலகிப் போய்விடுவார் என்று இராமகிருஷ்ணர் எண்ணி இருக்கக்கூடும்.

தம் கஷ்ட நிலையை விவேகானந்தர் இராம கிருஷ்ணரிடம் விளக்கிச் சொல்லியபோது ''அன்னை

யிடம் போய்ப் பிரார்த்தனை செய்துகொள்'' என்று இராமகிருஷ்ணர் உபதேசித்தார். அதுபோலவே, மூன்று முறை காளியிடம் பிரார்த்தனை செய்ய விவேகானந்தர் முயன்றார். மூன்று முறையும் 'வேலை கொடு' என்று அவரால் பிரார்த்திக்க முடியவில்லை. ''உண்மையைப்பற்றிய ஞானத்தை எனக்கு ஏற்படுத்து'' என்றுதான் அவரால் வேண்டிக்கொள்ள முடிந்தது.

விவேகானந்தருக்கு வேலை கிடைக்கவில்லை. இராமகிருஷ்ணரின் சீடரானார். அப்போதிலிருந்து விவேகானந்தரின் வாழ்க்கையில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. இராமகிருஷ்ணரை விவேகானந்தர் தம் ஆன்மிகக் குருவாக ஏற்றுக்கொண்டாரே தவிர, பிற்காலத்தில் விவேகானந்தர் வெளியிட்ட கருத்துகள் அனைத்தும் இராமகிருஷ்ணரின் கருத்துகள் என்று சொல்லிவிட முடியாது; இராமகிருஷ்ணர் இறந்த பிறகு விவேகானந்தர் இந்தியா எங்கும் சுற்றுப்பயணம் செய்தார். சில சமயங்களில் ராஜாக்கள் அவருக்கு ஆதரவளித்தார்கள். பசியால் வாழும் மக்களிடம் மதத்தைப்பற்றிப் பேசுவது வீண் வேலை என்று தம் சொற்பொழிவுகளில் விவேகானந்தர் அடிக்கடி எடுத்துச் சொன்னார். வறுமையிலிருந்து விடுபடாத வரை பாரத நாட்டிற்கு ஆன்மிக விமோசனமில்லை என்று அடித்துச் சொன்னவர் விவேகானந்தர்.

மேலை நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை அலட்சியப்படுத்துவதில் அர்த்தமில்லை. பொருளாதார முன்னேற்றத்திற்கு இந்துக்கள் பாடுபடாத வரை அவர்கள் பேசுகின்ற மதம், ஆன்மிகம் ஆகியவை அர்த்தமில்லாமல் போய்விடும் என்று எச்சரித்தார்.

விவேகானந்தர் உபதேசித்த கருத்துகள் அனைத்தும் வேதாந்தக் கருத்துகளாகும். அதாவது, உபநிஷதங்களின் சாரமே வேதாந்தம் என்று அழைக்கப்பட்டது.

1893-ம் ஆண்டு, சிகாகோ நகரில் நடைபெற்ற உலக மதங்களின் பாராளுமன்றத்தில் விவேகானந்தர் கலந்துகொண்டார். விவேகானந்தரிடம் ஈடுபாடு கொண்டிருந்த இராமநாதபுர ராஜா அவரை உலக மதங்களின் பாராளுமன்றத்தில் கலந்துகொள்ளுவதற்காக அமெரிக்காவிற்கு அனுப்பி வைத்தார்.

அந்தப் பாராளுமன்றத்தில் விவேகானந்தர் ஆற்றிய உரை இந்து மதத்தைப்பற்றிய தெளிவை அமெரிக்கர்களுக்கு ஏற்படுத்தியதோடு மட்டுமன்றி, இந்து மதம் ஒரு ஞான சாகரம் என்கிற உண்மையினையும் அவர்களுக்கு உணர்த்தியது. முதலில் அவரை அலட்சியப்படுத்தியவர்கள் பின்னர் இந்து மதத்தின் ஆழத்தையும் அகலத்தையும் வேதாந்த கருத்துகளையும் மேற்கோளுடன் தமது கம்பீரமான உரையில் எடுத்துச் சொன்னபோது, இவர் பேசாமல் போனால் அந்தப் பாராளுமன்றம் கூடியதற்குப் பயனேயில்லாமல் போயிருக்குமென அனைவரும் ஒப்புக்கொள்ளும் சூழ்நிலை உருவாயிற்று.

மறுநாளிலிருந்து அந்தக் கூட்டத்திற்கு வந்தவர்கள் அவர் பேசப்போகிறார் என்று உறுதி செய்துகொண்டே கூட்டத்தில் கலந்துகொண்டார்கள். இந்தியாவின் ஞானக்குரல் சுவாமிஜி என்று அனைவரும் ஒருமனதாக ஏற்றுக்கொண்டார்கள்.

அமெரிக்காவில் பல இடங்களிலும் உரை நிகழ்த்து வதற்கு அவருக்கு அழைப்புகள் வந்து குவிந்தவண்ண மிருந்தன. முதலில் அமெரிக்காவின் செல்வம் அவ ரைக் கவர்ந்தாலும் அவர்களின் குறுகிய புத்தி அவ ரைக் கோபம் கொள்ளச் செய்தது. பாஸ்டன் நகரில் சொற்பொழிவாற்றிய பொழுது, அங்குள்ள அமெரிக்கர் களை நரிகள் என்றும் ஓநாய்கள் என்றும் கடுமையாக விமர்சித்துப் பேசினர். "நீங்கள் எல்லாம் கிறிஸ்துவர் களா? சுயநலத்தில் ஊறித் திளைக்கும் நீங்கள் உங் களைக் கிறிஸ்துவர்கள் என்று அழைத்துக்கொள்ள வெட்கப்பட வேண்டாமா? இயேசுநாதர் திரும்பிவந் தால் இங்கே தலை வைத்துப் படுக்கக்கூடச் சம்மதிக்க மாட்டார்'' என்று கடுமையாகப் பேசினர்.

அமெரிக்க கிறிஸ்துவ மதகுருமார்கள் வெகுண்டு எழுந்தார்கள். அவர்மீது இல்லாததும் பொல்லாததும் சொன்னர்கள். மிக்ஸிகன் நகரில் அவர் தங்கி இருந்த வீட்டில் இருந்த வேலைக்காரப் பெண்ணை அவர் கெடுத்துவிட்டார் என்று பழி சுமத்தினர்கள். மிக்ஸிகன் கவர்னரின் மனைவியே, 'இது விவேகானந் தரைப்பற்றிய அவதூறு பிரச்சாரம்' என்று மறுப்பு அறிக்கை விட்டார்.

இந்து மதம் பற்றி அவர் பிரச்சாரம் செய்ய நல்ல உள்ளம் கொண்ட அமெரிக்கச் செல்வந்தர்கள் அவருக்கு ஏராளமான பண உதவி செய்ய முன்வந்தார் கள். அதையெல்லாம் ஏற்க அவர் மறுத்துவிட்டார். "இந்தியாவின்: வறுமை போக நீங்கள் உதவுங்கள். உங்களுக்கு அதற்கு பிரதி உபகாரமாக இந்தியா ஆன்மிகத்தை போதிக்கும்'' என்று எடுத்துச்

சொன்னார். அங்கிருந்து இங்கிலாந்திற்குச் சென்றார். இங்கிலாந்து அவருக்கு அமோகமான வரவேற் பளித்தது. ஐரோப்பாவிலும் சுற்றுப்பயணம் செய்து விட்டு இந்தியாவிற்குத் திரும்பினார். எல்லா இடங் களிலும் அவருக்கு அமோகமான வரவேற்பளிக்கப் பட்டது.

ஆனால், அவர் கல்கத்தாவிலேயே இருந்து இராம கிருஷ்ணர் விட்டுச் சென்ற பணியை அவர் தொடர வேண்டும்என விரும்பிய இராமகிருஷ்ணரின் சீடர்கள், அவர் வெளிநாடுகள் சென்று வந்ததை அவ்வளவாகப் பாராட்டவில்லை. அவர்களைப் பார்த்து விவேகானந்தர் சொன்னார்: "இருக்கின்ற இடத்திலேயே உட்கார்ந்து கொண்டு நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள்? இப்போது தேவைப்படுவது செயல். இராமகிருஷ்ண ரைப்பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது. அவர் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண் டிருப்பது சேவையாகாது. உங்களுக்கு விமோசனம் வேண்டும் என்பதையே மறந்துவிட்டு ஏழை இந்திய மக்களுக்கு விமோசனம் கிட்டச் செயல்படுங்கள்" என்று.

இராமகிருஷ்ணரின் சீடர்களை ஒன்றுபடுத்தி இராமகிருஷ்ண மிஷன் என்னும்அமைப்பை நிறுவினார். அவர் கண்ட இந்த அமைப்பும், மற்றோர் அமைப்பான இராமகிருஷ்ண மடமும் இன்றைக்கும் நல்ல முறையில் பணியாற்றி வருகின்றன.

இரண்டாம் முறையும் அவர் அமெரிக்கா சென்றார். திரும்பி வந்தபோது மிகவும் பலவீனமடைந்திருந்தார். நீண்ட நாள்களாக அவருக்குத் தொல்லை கொடுத்து

வந்த நீரிழிவு வியாதிக்குப் பலியாகி 1902-ம் ஆண்டு ஜூலை மாதம் 4-ம் நாள் மகா சமாதியடைந்தார்.

இந்து மதத்தின் மறுமலர்ச்சிக்கு விவேகானந்தர் செய்த சேவை இந்து மத வரலாற்றில் பொன் எழுத்துகளால் பொறிக்கப்பட வேண்டிய அத்தியாயமாகும்.

## 18. இந்து மகான்கள்

அமெரிக்காவில் விவேகானந்தர் செய்த பூர்வாங்க மதப்பிரச்சாரம், பின்னர் ஏராளமான இந்து சங்கியாசிகள் அமெரிக்காவிற்குச் சென்று வேதாந்தம் பற்றியும் யோகம் பற்றியும் பிரச்சாரம் செய்யும் வாய்ப்பை ஏற்படுத்தியது. பலர் அங்கே சென்று ஆசிரமங்களை நிறுவினார்கள். அமெரிக்கர்களுக்கும் இந்து மதச் சிந்தனைகள் பற்றி அறிந்துகொள்ளும் ஆர்வம் மிகுதியாக இருந்தது. இந்த ஆர்வத்தைத் தணித்துக் கொள்ளச் செல்வச் செழிப்பிலிருந்த அமெரிக்கர்கள் இலட்சக்கணக்கான டாலர்களைச் செலவழிக்கவும் தயாரானார்கள்.

இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு இந்தியாவிலிருந்து அமெரிக்காவிற்குப் போலிச் சாமியார்கள் அநேகம் பேர் சென்றார்கள். அதிசயங்கள் நிகழ்த்தும் அற்புத ஆற்றல் தங்களுக்கு இருப்பதாக இவர்கள் சொல்லிக்கொண்டார்கள். அமெரிக்கர்கள் சிலரும் இதை நம்பினார்கள். இந்தச் சாமியார்கள், எப்படிப்பட்ட மோசடியில் ஈடுபட்டார்கள் என்பதற்கு மேல்நாட்டு நூலாசிரியர் ஒருவர் ஒரு சம்பவத்தைக் குறிப்பிடுகிறார்.

இந்தியாவிலிருந்து சென்ற சாமியார் ஒருவர், ஒரு முறை இரயில் ஏறுவதற்காக இரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றூராம். அவர் பிளாட்ஃபாரத்தை அடைந்தபோது, இரயில் புறப்பட்டுவிட்டது. இவர் மந்திரங்களை ஜபித்தாராம். பிளாட்ஃபாரத்திலிருந்து நகர்ந்து சென்ற இரயில் திடீரென்று நின்றுவிட்டதாம். தம் மந்திர சக்தியால் அதை நிறுத்திவிட்டதாகச் சாமியார் சொன்னூர். உடனே ஓர் அமெரிக்கர் "அது உங்கள் மந்திர சக்தியால் நின்றது என்று எப்படி நிச்சயமாகச் சொல்ல முடியும்? ஒரு வேளை இரயில் புறப்பட்டவுடன் கைகாட்டியில் மாறுதல் செய்யப்பட்டதால் இரயில் நின்றிருக்கலாம் அல்லவா?" என்றூர். உடனே சாமியார், "ஆமாம், கைகாட்டியில் மாற்றம் ஏற்பட்டதால் இரயில் நின்றது என்பது உண்மைதான். ஆனால் கைகாட்டியில் ஏன் மாற்றம் ஏற்பட்டது தெரியுமா? அது நான் மந்திரம் ஜபித்ததால்!" என்று விளக்கம் சொன்னூர்.

இம்மாதிரிப் பல போலிச் சந்நியாசிகள் அமெரிக்கர்களின் ஆன்மிக ஆசையைப் பயன்படுத்திக் கொண்டு தவறான முயற்சியில் ஈடுபட்டார்கள். இந்தியாவின் கலாச்சாரத்தை அங்குப் பரப்பச் சென்ற அவர்கள் அமெரிக்காவில் மேல்நாட்டுப் பாணியில் வீடுகளைக் கட்டிக்கொண்டு, அந்த நாட்டுப் பாணியிலேயே வாழத் தொடங்கினூர்கள்.

இந்தியர்களே உபநிஷதங்களைப் படிக்க மறந்திருந்த நேரத்தில், ஜெர்மானியச் சிந்தனையாளரும் சமஸ்கிருத மொழியில் பாண்டித்தியம் உள்ளவருமான மேக்ஸ் முல்லர் உபநிஷதங்களைப் படித்து, அவற்றிடைய உள்ள உயர்ந்த தத்துவங்களை எடுத்துச் சொல்லத்

தொடங்கினர். இந்தியக் கல்வி முறையை அமைத்த மெக்காலே பிரபு சமஸ்கிருத மொழிக்குப் பாடத்திட்டத்தில் முக்கியத்துவம் இல்லாமல் செய்தார். இதனால் இந்தியக் கலாச்சாரத்தின் ஆதார மொழியான சமஸ்கிருதம் இன்றுவரை, பெற வேண்டிய செல்வாக்கைப் பெற முடியாமல் போயிற்று.

இந்தியர்களுக்கு அவர்களின் கலாச்சாரப் பெருமையை உணர்த்தியதில் அன்னிபெசன்ட் குறிப்பிடத்தக்கவர். விவேகானந்தரைப் போலவே சிறப்பான பேச்சாற்றல் மிக்கவர். செயல்பட வேண்டும் என்கிற ஆசை உடையவர். அப்போது இந்திய நாடு அந்நியர்களின் ஆட்சியில் இருந்ததால், அற்புதமான கலாச்சாரத்திற்குச் சொந்தக்காரர்களான இந்திய மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் சக்தியை இழந்தவர்களாக ஏன் இருக்க வேண்டும் என்கிற கேள்வியை அன்னிபெசன்ட் எழுப்பினர்.

அவரது சுதந்திர தாகம் இந்திய தேசிய காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கும் நிலையை அவருக்கு உண்டாக்கிக் கொடுத்தது. காந்திஜியோடு அன்னி பெசன்டால் ஒத்துப்போக முடியவில்லை. ஆகவே, தேசியப் போராட்டத்தில் அவர் செல்வாக்கு இழந்து போனர்.

ரஷ்யப் பெண்மணியான மேடம் பிளவட்ஸ்கி பிரம்ம ஞான சபை என்னும் ஒன்றை நிறுவினர். இந்தச் சபையின் நோக்கம், அனைத்து மதங்களும் ஒரே நோக்கத்தோடுதான் உருவானவை என்று உணர்த்துவதாகும். அனைத்து மதங்களுமே பிரபஞ்ச இரகசியத்தைக் கண்டுபிடிக்க முயல்வதாக பிரம்ம ஞான சபை கூறுகிறது.

மேடம் பிளவட்ஸ்கி பிரபஞ்சத்திற்கு அப்பால் உள்ள இரகசியத்தை தாம் அறிந்திருப்பதாகக் கூறினர். அது ஆன்மிக நிலை (Spiritual Plane) என்று கூறினர். ஆன்மிக ஆற்றல் படைத்தவர்கள் முகத்தில் தெய்விக ஒளியுடன் விளங்குவார்கள் என்றும் அவர் சொன்னர்.

பிரம்ம ஞான இயக்கத்தில் பெரும்பாலான கருத்துகள் உபநிஷதங்களை அடிப்படையாகக் கொண்டவை. கிழக்கையும் மேற்கையும் இணைக்கும் பொதுவான அமிசங்கள் அதில் பல இருந்தன.

பிரம்ம ஞான கருத்துகளை இந்தியாவில் பிரபலப்படுத்த அன்னிபெசன்ட் தீவிர முயற்சிகளை மேற்கொண்டார். இந்திய அறிவாளிகள் பலர் இந்த இயக்கத்தால் பெரிதும் கவரப்பட்டார்கள். இந்தியக் கலாச்சாரத்தில் ஊறித் திளைத்த ஜவஹர்லால் நேரு போன்றவர்களே பிரம்ம ஞான சபைக் கூட்டங்களின் மூலமாகத்தான் இந்து மதத்தின் விழுமிய கருத்துகளைப் புரிந்துகொள்ள வேண்டியிருந்தது.

அன்னி பெசன்ட் பிரம்ம ஞான சபையின் எதிர்காலத்தை உருவாக்குவதற்குத் தேர்ந்தெடுத்தவர்களுள் வி. கே. கிருஷ்ணமேனன் ஒருவர். ஆனல், இவர் பிரம்ம ஞான சபையில் நீடிக்கவில்லை. அரசியலில் ஈடுபாடுகொண்டு தம் பாதையை மாற்றிக்கொண்டார்.

அன்னிபெசன்டின் கவனம் வேருேர் இளைஞனின் மீது விழுந்தது. பிரம்ம ஞான சபையை வழி நடத்திச் செல்ல அவரைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சியும் அளித்தார். அவர்தான், உலகப் புகழ் பெற்றவரும் உபநிஷத கருத்துகளைத் தூய்மையான நிலையில் எடுத்துச்சொல்லும் தகுதி படைத்தவருமான ஜே. கிருஷ்ணமூர்த்தி.

## 19. ஜே. கிருஷ்ணமூர்த்தி

பிரம்மஞானக் கருத்துகளை வெளியிடுவதற்கென்று, அன்னிபெசன்ட் அம்மையாரால் தேர்ந்தெடுக்கப்பட்டு உருவாக்கப்பட்டவர் ஜே. கிருஷ்ணமூர்த்தி. இயேசு பிரானின் மறு அவதாரம் இவர்தான் என்று அன்னிபெசன்ட் நம்பினார். இங்கிலாந்திற்கு அவரை அழைத்துச் சென்று, மத விஷயங்களிலும் தத்துவ விஷயங்களிலும் அவருக்குப் பயிற்சி அளித்தார். ஆனால், ஜே. கிருஷ்ணமூர்த்தியின் திட்டம் வேறாக இருந்தது. கட்டுப்பாடுகளையெல்லாம் உதறித் தள்ளிச் சுய சிந்தனையாளராக அவர் உருப்பெற்றார்.

சாதாரணமாக, ஆன்மிக விஷயங்களைச் சொல்லுகிறவர்கள் காவி உடை தரித்துத் தாடியும் ஜடா முடியுமாகக் காட்சி தருவதுதான் வழக்கம். ஆனால், கிருஷ்ணமூர்த்தி ஒரு சாதாரண மனிதரைப் போலத்தான் உடையணிவார். ஆசிரமம் எதிலும் அவர் வசிக்கவில்லை. ரோமாபுரியைத் தம் வாசஸ்தலமாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டார். மத விஷயங்களில் அவருக்கு நம்பிக்கை இல்லை.

கிருஷ்ணமூர்த்தியைப் பொறுத்தவரையில் அவர் ஒரு சுய சிந்தனையாளர். அவரைப்பற்றி ஒரு

சம்பவம் சொல்லப்படுகிறது. அவர் ஆங்கிலத்தில்தான் உரையாற்றுவார். ஒரு சமயம் அவர் பேச்சைக் கேட்க ஆங்கிலம் தெரியாதவர்களும் கூடியிருந்தார்கள். வந்திருந்த அனைவருக்குமே ஆங்கில பாஷை தெரியாவிட்டாலும், அவர் பேசுவது தெளிவாகப் புரிந்தது என்று சொன்னார்கள். கிருஷ்ணமூர்த்தியிடம் இதுபற்றிச் சொன்ன போது, அது பைத்தியம் பிடித்த சில பெண்களின் மனப்பிரமை எனச் சொல்லி அலட்சியப்படுத்திவிட்டார். அற்புதங்கள் நிகழ்த்துவதில் அவருக்கு நம்பிக்கை இருந்ததில்லை. 'நான் எந்தப் புதிய தத்துவத்தையும் சொல்லுவதற்காக வரவில்லை' என்று அவர் அடிக்கடி கூறுவார்.

அவர் சொல்லுகிறார்: "ஒன்றை நீங்கள் ஆரம்பத்திலிருந்து புரிந்துகொள்ள வேண்டும். நான் எந்தத் தத்துவத்தையும் உருவாக்கவில்லை. தத்துவங்கள் அனைத்துமே முட்டாள்தனமானவை என்று எனக்குத் தோன்றுகிறது. நான் ஒரு தத்துவத்தை உங்களுக்குச் சொல்லுகின்ற முட்டாளாக இருந்தால், நீங்களும் அதைப் பின்பற்றலாம். நீங்கள் காப்பி அடிக்கிறீர்கள், நான் சொல்லுவதை அப்படியே ஏற்றுக்கொள்ளுகிறீர்கள் என்றுதான் அதற்கு அர்த்தம். மற்றவர்கள் சொல்லுவது எதையும் நீங்கள் தெரிந்துகொள்ளத் தொடங்குகிற போது, நீங்கள் ஓர் இரண்டாம் தர மனிதராகிவிடுவீர்கள். ஏனெனில், மற்றவர்கள் சொல்லுவதை வைத்து நம்மை நாமே அறிந்துகொள்ளத் தொடங்குகின்ற போது, நாம் நம்மைப்பற்றித் தெரிந்துகொள்ளுவதற்கில்லை. அவர்களைப்பற்றித்தான் தெரிந்துகொள்ளுகிறோம்.

உபநிஷதத்தில் ஒரு கருத்துண்டு. நீங்கள் ஒரு மலரைப் பார்க்கின்ற போது அது அழகாக இருக்கிறது

என்று நினைக்காதீர்கள். ஏனெனில், அது ஏற்கனவே காலங்காலமாக உங்களுக்குப் போதிக்கப்பட்டு வந்துள்ள கருத்து.''

கிருஷ்ணமூர்த்தியும் இந்தக் கோட்பாட்டையே தான் பின்பற்றித் தம் கருத்தை வெளியிடுகிறார். வேறு எந்தக் கருத்தின் துணையுமில்லாமல் நம்மை நாமே புரிந்துகொள்ளுவதற்கு முயல்வோம் என்கிறார் கிருஷ்ணமூர்த்தி.

பல்வேறு சூழ்நிலைகள் நம்மைக் கட்டுப்படுத்தி, தம் வயப்படுத்தி வைக்கின்றன. வெங்காயத்தை உரித்தால் முடிவில் ஒன்றுமில்லை என்பதைப் போல, வாழ்க்கையைப்பற்றிக் கேள்விகள் கேட்டுக்கொண்டிருப்பது அர்த்தமில்லை. கடந்த காலம் நமக்குச் சுமையாகிவிடக்கூடாது. அந்தச் சுமையிலிருந்து நாம் விடுபடுகின்ற போது மட்டுமே நாம் உண்மையை உணர முடியும்.

இன்பந்தான் சமூக அமைப்பாக இருந்து இயங்கிக் கொண்டிருக்கிறது. குழந்தைப் பிராயத்திலிருந்து மரணமடைகிறவரை திருட்டுத்தனமாக—இரகசியமாக அல்லது வெளிப்படையாக நாம் இன்பத்தைத் தேடிச் சென்றுகொண்டிருக்கிறோம். ஆகவே, எந்தவிதமான இன்பத்தை நாம் தேடினாலும் அதைப்பற்றி நாம் தெளிவுடன் இருக்க வேண்டும். ஏனெனில், அதுதான் நம் வாழ்க்கைக்கு வழிகாட்டி, அதுதான் நம்முடைய வாழ்க்கையை உருவாக்கப்போகிறது என்று சொல்லுகிறார் கிருஷ்ணமூர்த்தி.

இன்பத்தை அடையும் நமது தொடர்ந்த முயற்சி ஒரு கட்டத்தில் வேதனையாக மாறிவிடுகிறது. கிருஷ்ண

மூர்த்தியைப் பொறுத்தமட்டில் மனிதரின் மகிழ்ச்சி யின்மைக்குப் பயம்தான் காரணம் என்கிறுர். பயத் தால் கட்டுண்டு இருக்கும் மனம், எத்தனேயோ கற்பனே களேத் தனக்குத்தானே செய்துகொள்ளுகிறது. இதன் விளேவாகத் தன்னே ஏமாற்றிக்கொள்ளும் சூதையும் அது வளர்த்துக்கொள்ளுகிறது. நம் வாழ்க்கையைப் பயம் நாசப்படுத்துவதைப் போல வேறு எதுவும் நாசப் படுத்துவதில்லே.

கடவுளேப் பார்த்துப் பயப்படுகிறேம். துரதிருஷ் டம் வந்துவிடுமே என்று பயப்படுகிறேம். நினேப்பது நடக்காமல் போய்விடுமோ என்று அச்சப்படுகிறேம். இவை அனேத்தும் நம் எண்ணங்களிலிருந்துதான் தோன்றுகின்றன. இதற்கு முன் சமூகத்தில் ஏற்பட்ட பழைய விஷயங்களே நினேவுக்குக் கொண்டுவரும் போது இந்தப் பயம் தாளுகவே வந்து தோன்றுகிறது.

பயத்திலிருந்து உங்களேத் தனிமைப்படுத்திக் கொள்ளுங்கள் என்கிறுர் கிருஷ்ணமூர்த்தி. பயத்தைப் பற்றி எந்தத் தீர்மானமும் செய்யாமல், அதைக் கவ னியுங்கள். அதை உங்களின் பயம் என்று எண்ணு தீர்கள். தைரியத்தைக் கொண்டு அதனுடன் போராட லாம் என்று நினேக்காதீர்கள். ஏனெனில், தைரியம் என்பது உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டுள்ள மற்றெரு விஷயம்.

நீங்கள் ஒரு பார்வையாளராக இருந்து பயத்தைக் கவனித்த பிறகு, பார்வையாளரின் நிலேயிலிருந்து உங் களே விலக்கிக்கொள்ள அடுத்து முயற்சி செய்யுங்கள். அப்போது, நீங்கள்தான் பயம் என்கிற தெளிவு உங்க ளுக்கு ஏற்படும். இந்த உண்மையை நீங்கள் உணரும்

போது, பயம் உங்களிடமிருந்து வேருனதல்ல என்னும் நிலை தோன்றும்போது, பயம் தானுகவே ஒரு முடிவுக்கு வந்துவிடுகிறது. சுருங்கச் சொல்ல வேண்டுமானுல், சமூகத்தைத் திருப்தி செய்ய வேண்டும் என்கிற நமது ஆசையே பயத்திற்குக் காரணமாகிவிடுகிறது என்கிருர் கிருஷ்ணமூர்த்தி. ஒவ்வொருவரும் சமூகத்தில் மரியாதைக்குரியவராகத் தம்மை ஆக்கிக்கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்திற்கு ஆட்படும்போது பயம் அவனைப் பற்றிக்கொள்ளுகிறது.

மனிதனுக்குச் சட்டம் சுதந்தரத்தைப் பெற்றுத் தருகிறது என்று சொல்லுவது வெறும் கற்பனை. ஏனெனில், அது உண்மையானுல் சட்டத்திலிருந்து மனிதனுக்குச் சுதந்தரத்தைப் பெற்றுத் தருவது யார் என்னும் கேள்வி தானுகவே பிறக்கிறது.

சுதந்தரம் என்பது மனத்தின் ஒரு நிலை என்கிருர் கிருஷ்ணமூர்த்தி.

கடவுளை நேசிக்க வேண்டும் என்று சொல்லுவதையே கிருஷ்ணமூர்த்தி கேலி செய்கிருர். கடவுள் என்பதே உன் கற்பனையாக இருக்கும்போது, கடவுளை நேசிக்கிறேன் என்று சொல்லுவது, உன் கற்பனையை நீ நேசிக்கிருய் என்பதைத்தவிர வேறென்ன என்று கிருஷ்ணமூர்த்தி கேட்கிருர்.

கிருஷ்ணமூர்த்தியின் கருத்துகளை ஆழமாகப் படித்தால், உபநிஷதங்களின் உயர்ந்த தத்துவங்களை அவர் எளிமையாகச் சொல்லியிருக்கிருர் என்பதைச் சுலபத்தில் புரிந்துகொள்ளலாம். உபநிஷதங்களின் சாரத்தை அவரைவிடத் தெளிவாகவும் விளக்கமாகவும் வேறு யாராலும் சொல்ல முடியுமா என்பது சந்தேகமே.

# 20. "ஹரே கிருஷ்ண!"

இருபதாம் நூற்றுண்டின் இடைக்காலத்தில் தோன்றிய கிருஷ்ண பக்தி இயக்கம் குறிப்பிடத் தக்கது. இது உலகெங்கும் பரவியுள்ள பேரியக்கமாக—குறிப்பாக அமெரிக்காவில்—மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ள இயக்கமாக இன்றைக்கும் திகழ்ந்து வருகிறது. சில சந்தர்ப்பங்களில் ஹிப்பி இயக்கத்தோடு இதைப் போட்டுக் குழப்பிக்கொள்ளுகிறவர்களும் இருக்கிருர்கள்.

கிருஷ்ண பக்தி இயக்கத்திற்கு உலகெங்கும் கிளைகள் இருக்கின்றன. பன்னிரண்டு நாடுகளில் அறுபத்துமூன்று கிளைகள் இருக்கின்றன. இவர்கள் தெருத்தோறும் ஆடிப்பாடி ஆர்ப்பாட்டம் செய்வதால் இவர்களுடைய இயக்கம் மக்களைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது.

வாஷிங்டன், நியூயார்க் போன்ற பெரிய அமெரிக்க நகரங்களில்கூட இவர்கள் ஆடிப்பாடி மக்களின் கவனத்தைக் கவருகிருர்கள்.

இந்த இயக்கத்தின் தலைமைப்பீடம் பம்பாயில் இருக்கிறது. இந்த இயக்கத்தின் தலைவரான சுவாமி

பிரபுபாதரின் தலைமைப் பீடமும் இங்கேதான் இருக்கிறது. சில சமயங்களில் இவர் பெரிய விழாக்கள் நடத்தி, உபன்யாசம் செய்கிறார். நூற்றுக்கணக்கான சீடர்கள் வந்து கூடுகிறார்கள்.

அலங்காரக் கொட்டகை போடப்பட்டு வண்ண விளக்குகளால் அது அலங்கரிக்கப்படுகிறது. ஒலி பெருக்கிகள் கிருஷ்ணரைப்பற்றிய பாடல்களை முழக்குகின்றன. இந்த இயக்கத்தைச் சார்ந்த இளைஞர்கள் கிருஷ்ணரைப்பற்றிய கீர்த்தனங்களைப் பாடுகிறார்கள். கிருஷ்ண வழிபாடு அங்கே நடைபெறுகிறது. மேல் நாட்டினர் பலர் மொட்டையடித்துக்கொண்டு குடுமியுடன் தங்களை மறந்து ஆடிப் பாடுகிறார்கள். இந்தக் கூட்டத்தில் பெண்களும் இருக்கிறார்கள். கேள்விகளைக் கேளுங்கள் என்று குரு சொல்லுகிறார். ஒவ்வொருவரும் ஒரு கேள்வியைக் கேட்கிறார்கள். எல்லாக் கேள்விகளுக்கும் விடை கிடைக்கிறது. மரணம் என்பதே இல்லை என்கிறார். மரணம் என்பது பழைய உடையை நீக்கிவிட்டுப் புதிய உடையைப் போட்டுக் கொள்ளுவது என்று விடை கிடைக்கிறது.

'ஹரே கிருஷ்ணா! ஹரே ராமா' என்கிற பஜனை எல்லாப் பிரச்சினைகளுக்கும் தீர்வு கொண்டுவிடும் என்பது போல விளக்கமளிக்கப்படுகிறது.

மரக்கறி உணவையே புசிக்க வேண்டும், மாமிச உணவு கூடாது என்று குரு உபதேசிக்கிறார். அந்த உணவே உடலைத் தூய்மைப்படுத்தும் என்று சொல்லுகிறார். கீதையைப் படிக்கச் சொல்லி உபதேசிக்கிறார். இவ்வாறு கேள்வியும் பதிலுமாக, ஆட்டமும் பாட்டமுமாக அந்த விழா அமோகமாக நடைபெறுகிறது.

அலங்கரிக்கப்பட்ட கிருஷ்ணனின் சிலைக்கு ஒரு பெண், மயில் விசிறி கொண்டு வீசுகிறாள். கிருஷ்ணன் ராதையோடு காட்சி தருகிறான். கிருஷ்ணனுக்குப் படைக்கப்பட்ட இனிப்புப் பண்டங்கள் அனைவருக்கும் வினியோகிக்கப்படுகின்றன. அந்தப் பிரசாதத்தைக் கிருஷ்ணனின் அன்பளிப்பாக எண்ணி, அனைவரும் சாப்பிட்டுக் கிருஷ்ண பக்தியில் திளைக்கிறார்கள். இவர்களைப் பொறுத்தவரையில் ஆடுவதும் பாடுவதும், அதன் விளைவாக ஆனந்தம் கொள்ளுவதும் ஒரு சிறந்த பக்தி மார்க்கமாகக் கருதப்படுகிறது.

கிருஷ்ணனுக்குத் தீப ஆராதனை காட்டப்படுகிறது. அனைவரும் அந்தக் காட்சியில் ஆனந்தப் பரவசமடைகிறார்கள்.

கிருஷ்ண பக்தி இயக்கத்திற்கு மூல புருஷர் கிருஷ்ண சைதன்யர். இந்தக் கிருஷ்ண பக்தி இயக்கம் வங்காளத்தின் ஒரு பகுதியை ஆண்மையை இழக்கச் செய்துவிட்டது என்று ஒருமுறை விவேகானந்தர், இந்த இயக்கத்தின் மூல புருஷரான சைதன்யரைக் கடுமையாகச் சாடி இருக்கிறார்.

சைதன்யர் வேதங்களை ஏற்கவில்லை. சங்கரரின் உபதேசங்களை ஒப்புக்கொள்ளவில்லை. அவரைப் பொறுத்தவரையில் தம் சீடர்கள் தெருக்களில் ஆடுவதையும் பாடுவதையும் விரும்பினார். கோபியர்களிடம் கிருஷ்ணன் இதயத்தைப் பறி கொடுத்ததைப் போலக் கிருஷ்ண பக்தர்கள் கிருஷ்ணனிடம் மனத்தைப் பறி கொடுக்க வேண்டுமென்று உபதேசித்தார். 'ஹரே கிருஷ்ணு, ஹரே ராமா!' என்கிற மந்திரத்தை இதய பூர்வமாகத் திருப்பித் திருப்பிச் சொல்லுவதன் மூலம்,

கிருஷ்ணனும் ராதையும் தங்களின் அன்பை அபரிமித மாக பக்தர்களுக்கு அருளுவார்கள் என்று நம்பினர்.

இந்த இயக்கத்திற்கு இந்திய மக்களிடையே பெரிய ஆதரவு இருப்பதாகச் சொல்ல முடியாது. அமெ ரிக்கர்களுக்கு இதிலே நல்ல ஈடுபாடு இருக்கிறது. குறிப்பாக, அமெரிக்க இளைஞர்களும் யுவதிகளும் இதில் நிறையச் சேர்ந்து, ஆங்காங்கே இதன் கிளைகளை அமைத்திருக்கிறார்கள். ஒரு விதத்தில் அமெரிக்கப் பெற்றோர்கள் தங்கள் பெண்களும் பிள்ளைகளும் இந்த இயக்கத்தில் சேர்ந்திருப்பது பற்றித் திருப்தி கொண்ட வர்களாய் இருக்கிறார்கள். கிருஷ்ண பக்தி இயக்கம் ஒரு காலத்தில் பேரலையாக அமெரிக்காவில் பரவியது. அமெரிக்கர்களையே ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

# 21. அற்புதங்கள்

இந்தியாவின் ஆன்மிகச் சக்தியின் மதிப்பை, இந்து மகான்கள் நிகழ்த்தும் அற்புதங்களை வைத்துத் தான் மேல்நாட்டினர் பெரிதும் மதிக்கிறார்கள். இந்த அதிசயங்கள் நம்பிக்கையின் விளைவாகப் பலனைத் தருகின்றனவா அல்லது உண்மையிலேயே தங்கள் ஆன்மிகச் சக்தியால் மகான்கள் இந்த அதிசயங்களை நிகழ்த்துகிறார்களா என்பது குறித்து மேல்நாடுகளில் முடிவில்லாமல் விவாதங்கள் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன.

இவர்களுள் சிலரைப்பற்றி இந்த அத்தியாயங்களில் பார்க்கலாம்.

ஆண்கள் மட்டுமன்றிப் பெண்களுங்கூட அதிசயங்கள் நிகழ்த்தும் ஆன்மிகச்சக்தி படைத்தவர்களாய் இருக்கிறார்கள். இவர்களுள் நிர்மலாதேவி குறிப்பிடத்தக்கவர். இவர் இந்து அல்ல. கிறிஸ்துவ மதத்தைச் சார்ந்தவர். மதம் எதுவானாலும் கடவுள் பொதுவானவர் என்கிற நம்பிக்கை கொண்டவர். சிறு வயதிலிருந்து இவருக்கு விசேஷமான ஆற்றல் இருந்தது. அப்படி இருப்பதாகப் பெற்றோர்களும் நம்பினார்கள். நோய்களைக் குணப்படுத்தும் சக்தி தமக்கு இருப்பதாக

இவர் நம்பினுர். உடலைப்பற்றி பூர்ணமான அறிவு பெற டாக்டருக்குப் படித்தார். இந்து மத ஆன்மிக நூல்களைப் படித்துக் குண்டலினி சக்தியைப்பற்றித் தெரிந்துகொண்டார்.

இவரிடமுள்ள சக்தி எல்லோரிடமும் இருப்பதாகவும், மற்றவர்களிடம் எதிர்மறைச் சக்தியாக இருப்பதாகவும் இவர் கூறுகிருர். இவரிடம் உள்ள சக்தி நேர்மறை சக்தியாக இருப்பதால், இவர் கரத்தை நோயாளிகள் தொடும் போது, இவர் உடலிலிருந்து நேர்மறை சக்தி நோயாளியின் உடலில் பாய்ந்து, நோயைக் குணப்படுத்துவதாக இவர் நம்புகிருர்.

ஹிஸ்டீரியா நோய் வந்தவர்களை நிர்மலாதேவி சுலபத்தில் குணப்படுத்திவிடுகிருர், அவ்வாறு குணமான ஒரு பெண் இவரின் பிரதம சிஷ்யை ஆனுர்.

இரத்தப் புற்றுநோய் உள்ள ஒருவர் நியூயார்க் சென்று அந்த நோய் குணமாகாமல் இறந்து போவதைத் தவிர வேறு வழியிலலை என்கிற முடிவுடன் இந்தியாவிற்குத் திரும்பி வந்தார். அவர் நிர்மலா தேவியைச் சந்தித்தார். அவரின் புற்று நோயின் கடுமை குறையத் தொடங்கியது.

இம்மாதிரிப் பல நோய்களை நிர்மலாதேவி குணப்படுத்தி இருப்பதாகச் சொல்லுகிருர்கள்.

இந்திய ஆன்மிக உலகில் ஆன்மிகச் சக்தியால் நோய்களைக் குணப்படுத்தியவர்களுள் சத்திய சாயி பாபா குறிப்பிடத்தக்கவர். 1856 லிருந்து 1916 வரை இவர் வாழ்ந்தார். இவருக்கு இந்தியா முழுதும் லட்சக் கணக்கான பக்தர்கள் இருந்தார்கள்.

இவர் இந்து அல்ல, முஸ்லிம். இந்தியாவெங்கும் இலட்சக்கணக்கான இந்துக்கள் இவரைத் தெய்வ மாக வழிபடுகிருர்கள். இஸ்லாமிய மதம் அற்புதங் களை ஏற்றுக்கொள்ளுகிறது. சாயிபாபா இந்துக் கோவில்களுக்குச் சென்ருர். அங்குதான் அதிசயங்களை நிகழ்த்திஞர். தண்ணீரை ஊற்றி விளக்கு எரித்தார். வியாதிகளைக் குணப்படுத்திஞர். ஏராளமான இந்துக் கள் இவரை அவதார புருஷராகக் கருதி, நோயைக் குணப்படுத்திக்கொள்ள இவரை நாடி வந்தார்கள். யாகம், குண்டலினி ஆகிய எதைப்பற்றியும் இவர் பேசியதில்லை.

இவர் இறந்தபோது, 'மீண்டும் திரும்பி வருவேன்' என்று சொன்ஞர். இவர் பக்தர்கள் இவர் உருவம் பொறித்த செப்புக் காசுகளை அணிந்துகொண்டார்கள். தீமை எதுவும் தங்களை அணுகாது என்றும் இன்றைக் கும் நம்புகிருர்கள். 'நான் இருக்கப் பயம் ஏன்' என்பது இவரது பிரபலமான வாசகங்களுள் ஒன்று.

சாயி பாபாவின் மறுபிறப்பு நான்தான் என்று புட்டபர்த்தியிலிருக்கும் சத்திய சாயி பாபா சொல்லு கிருர். இவர் பல சித்துகள் புரிகிருர். இலிங்கம், கடிகாரம், கிருஷ்ணன் சிலை, விக்கிரகம் போன்றவை களைக் கையை ஆட்டி வரவழைத்துப் பக்தர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுக்கிருர். இவரும் நோய்களைக் குணப்படுத்தும் ஆற்றல் பெற்றவர் என்னும் நம்பிக் கையில், தினமும் பல்லாயிரக்கணக்கானவர்கள், இவர் வசிக்கும் ஆந்திர மாநிலத்திலுள்ள புட்டபாத்தி என் னும் சிற்றூருக்குச் சென்று, இவர் அருளிஞல் ஆறு தல் அடைகிருர்கள். இவரின் அற்புதச் செயல்களை நேரில்கண்டறிய மேல்நாட்டினர் பலரும் இந்த ஊருக்கு

வருகிறார்கள். அப்படி வந்தவர்களுள் ஒருவர் இவரது அதிசயத் திறனைக் கண்டு பிரமித்து, இவரைப்பற்றித் தம் அனுபவங்களை ஆதாரமாக வைத்து வாழ்க்கை நூல் ஒன்றை எழுதியிருக்கிறார்.

நவீன கால யோகிகளுள் மிகவும் செல்வாக்குப் பெற்றவராய்த் திகழ்கிறவர் மகேஷ் யோகி ஆவார். இவரது ஆழ்நிலைத் தியான முறை உலகெங்கும் உள்ள டாக்டர்களாலும் நிறுவனங்களினாலும் ஏற்றுக்கொள் ளப்பட்டு இன்றைக்கும் பயிற்சி செய்யப்பட்டு வரு கிறது. ஆழ்நிலைத் தியானத்தை முறையாகப் பயிற்சி யளிக்கும் அமைப்புகள் உலகெங்கும் மிகத் திறமை யாக இன்றைக்கும் செயல்பட்டு வருகின்றன.

ஆழ்நிலைத் தியானப் பயிற்சியால் பயன் பெற்ற வர்கள் ஏராளமானவர்கள் இருக்கிறார்கள். நோய்களைக் குணமாக்குவதோடு தெளிந்த சிந்தனை, கூரிய அறிவு ஆகியவற்றுக்கு ஆழ்நிலைத் தியானப் பயிற்சி உதவுவ தாக இதில் அனுபவம் உடையவர்கள் சொல்லுகிறார் கள்.

தியான வழியில் உபநிஷத வாழ்க்கையில் எப்படி வாழ்வதென்று மகேஷ் யோகி போதித்திருப்பதாகக் கொள்ளுவதில் தவறில்லை.





# 22. ரஜினிஷ்

இந்தியச் சாமியார்களுள் ரஜினிஷைப் போல் பிரச்சினைக்குரியவராய் வேறு எவரும் இருந்ததில்லை. விவாதங்களுக்கும் வாதப் பிரதிவாதங்களுக்கும் உரியவரான ரஜினிஷ், பூனவில் தம் ஆசிரமத்தை நடத்தி வந்தார். அங்கு எழுந்த அவதூறுகளும் அபிப்பிராயங்களும் அவருக்குப் பிடிக்காததாலோ என்னவோ, இப்பொழுது அமெரிக்காவில் ஒரேகான் என்னுமிடத்தில் ஆசிரமம் அமைத்துக்கொண்டு தம் பணிகளைத் தொடருகிறார்.

ரஜினிஷ், தத்துவப் பேராசிரியராக இருந்தார். பல்வேறு தத்துவங்களையும் ஒப்பிட்டுப் பயின்றவர். தம் ஆசிரமவாசிகள் சில குறிப்பிட்ட நூல்களைக் கட்டாயம் பயில வேணடுமென்று வற்புறுத்தியவர். ஆசிரமத்தில் பெரிய நூல் நிலையமே வைத்திருந்தார்.

ரஜினிஷ் இந்தியிலும் ஆங்கிலத்திலும்அருமையாக உரை நிகழ்த்தக்கூடியவர். ஆசிரமவாசிகள் விரும்பியதைச் செய்யலாம் என்று அனுமதிப்பது அவர் வழக்கமாக இருந்தது. சத்தம் போடலாம், பாட்டுப் பாடலாம், நடனமாடலாம். அவை முடிந்த பிறகு அமைதியாக இருபது நிமிடங்கள் தியானம் செய்யச்

சொல்லுகிறார். “எதை வேண்டுமானாலும் நினைத்துத் தியானம் செய்யுங்கள்” என்கிறார். “அதற்குப் பிறகு இருபது நிமிடங்கள் மகிழ்ச்சியோடு இருங்கள்” என் கிறார்.

ரஜினிஷ் தெளிவாகப் பேசுகிறார். ஆழமான எண்ணங்களை வெளியிடுகிறார். கருத்துகள் ஆணித் தரமாக வெளிப்படுகின்றன.

ரஜினிஷின் சொற்பொழிவுகளுக்குப் பிறகு ஆசிரம வாசிகள் அவரிடம் பக்தி வெறி கொண்டவர்களைப் போல ஆடுகிறார்கள், பாடுகிறார்கள். ஆனால், அங்கே நிலவும் சூழ்நிலையைக் குழப்பம் என்று சொல்லிவிட முடியாது. கையை உயர்த்தி வந்தவர்களை ஆசீர் வதிக்கிறார். அங்குச் சென்றவர்கள், அவ்வாறு அவர் ஆசீர்வதிக்கும் போது பார்ப்பவர்களின் உள்ளத்தில் ஒரு காந்த சக்தி பாய்வதாகச் சொல்லுகிறார்கள்.

அமைதி தேடி அவர் ஆசிரமத்திற்கு உலகிலுள்ள பல்வேறு நாடுகளிலிருந்து மக்கள் வருகிறார்கள். அவர் கள் சில மாதங்கள் தங்கி, அமைதி பெற்று, தாயகம் திரும்புகிறார்கள். ஆண்களும் பெண்களும் பேதமின் றிப் பழகுகிறார்கள். தடையின்றி உறவு கொள்ளுகிறார் கள். ஒருவருக்கொருவர் மனம் விட்டுப் பேசுகிறார்கள். அங்கு மந்திரம் எதுவும் ஜெபிக்கப்படுவதில்லை. அவர் க்ள் ஆர்ப்பாட்டமாகக் கூச்சலிடுவதும், பின்பு அவர் ஆணையிட்ட பின் எல்லோரும் அமைதி அடைவதும் மனத்தைத் தொடும் காட்சியாக இருக்கிறதென்று அங்குச் சென்று வந்தவர்கள் கூறுகிறார்கள்.

உடலைக் கேவலமான விஷயமென்று அவர்கள் கருதுவதில்லை. போற்றப்பட வேண்டிய—மதிக்கப்பட

வேண்டிய விஷயமாகக் கருதுகிறார்கள். ஆனால், ரஜினிஷின் ஆசிரமம் பற்றி நம் நாட்டிலிருந்து வெளி நாடுகள் வரை மோசமான கருத்துகளும் நிலவுகின் றன என்பதை மறுப்பதற்கில்லை. ரஜினிஷ் சொல்லு கிறார்: "சமூக அமைப்புகள் அனைத்துமே மனிதனின் தனித் தன்மையைக் கொன்றுவிடுகின்றன. அவனை இயந்திரமாக்கிவிடுகின்றன. நம் பல்கலைக் கழகங்கள் அனைத்தும் இளைஞர்களிடையேயும் யுவதிகளிடையே யும் தோன்றும் சிந்தனைப் பொறிகளை அணைத்துவிடு கின்றன. ஆன்மாவைக் கொன்று மனிதனை இயந்திர மாக்கிவிடுகின்றன. அப்படிப்பட்ட மனிதனையே சமூகம் ஆபத்தில்லாதவன் என்று ஏற்றுக்கொள்ளு கிறது. அவன்மீதுதான் சமூகத்தால் நம்பிக்கை வைக்க முடிகிறது. மனிதன் இயந்திரமாகிவிடுவதால் அவன் எப்போது, என்ன செய்வான் என்று முன்கூட் டியே வரையறுத்துச் சொல்லிவிட முடிகிறது. ஒரு கணவன், ஒரு மனைவி, ஒரு வழக்கறிஞர், ஒரு விஞ் ஞானி ஆகியவர்கள் எப்படி நடப்பார்கள் என்று தெளி வாகச் சொல்ல முடியும். சமூகம் இயந்திரமாக நடந்து கொள்ளுகின்றவர்களைத் தொல்லையில்லாமல் ஏற்றுக் கொள்ளுகிறது.

இன்றைய சமூகத்தின் மிகப்பெரிய தொல்லையாக ரஜினிஷ், ஒரு குறிப்பிட்ட தொழிலில் ஒருவர் பெறும் விசேஷமான திறமையே என்று சுட்டிக் காட்டுகிறார். விசேஷத் திறமைசாலிகள் இருபத்துநான்கு மணி நேர மும் தங்களுக்குத் தெரிந்த விஷயத்தைப்பற்றியே சிந் திக்கிறவர்களாக இருக்கிறார்கள். எந்தப் புதிய விஷயத் தையும் அவர்கள் அணுகுவதில்லை. எல்லாவற்றை யுமே தக்க நியாயத்திற்குள் கொண்டுவருவது முடி யாத காரியம். இந்த வீணான முயற்சியில்தான்

மனிதன் தன் நேரத்தை விரயமாக்கிக்கொண்டிருக்கிறான். இவை ரஜினிஷின் அடிப்படைச் சிந்தனைகளுள் சில.

ரஜினிஷ் விவாதத்திற்குரிய மனிதராக இருக்கலாம். அவர் சொற்பொழிவுகள் நூல் வடிவில் வெளிவந்திருக்கின்றன. நடு நிலைக் கண்ணோட்டத்தோடு அவற்றைப் படிக்கின்ற எவரும், அவரின் சிந்தனைகள் பரிசீலனைக்குரியவை என்பதை மறுப்பதற்கில்லை-

## 23. சின்மயானந்தா

உபநிஷதங்களின் சாரத்தை அறிவுப்பூர்வமாகவும் அதே சமயம் ஜனரஞ்சிதமாகவும் சொல்லக்கூடியவர்களுள் சுவாமி சின்மயானந்தா குறிப்பிடத்தக்கவர்.

தெளிவான ஆங்கிலத்தில் கடல் மடை திறந்தது போலப் பிரசங்கம் செய்யும் ஆற்றல் அவருக்கு உண்டு. 'கணீர்' என்னும் குரலில் ஆன்மிக விஷயங்களைத் தக்க மேற்கோள்களுடன் அவர் எடுத்துச் சொல்கின்ற போது, கேட்போரின் மனங்களில் அவை ஆழமாகப் பதிந்துவிடுகின்றன.

எதையும் ஒளிவு மறைவின்றி அவர் பேசுகிறார். மத சம்பந்தப்பட்ட புராதன விஷயங்களில் முரண்பாடு இருந்தாலும், அது முரண்பாடுதான் என்று ஒப்புக்கொள்ளுகின்ற மனப்பக்குவம் அவருக்கு இருக்கின்றது. ஆஷாடபூதித்தனமாக எதையும் பூசி மழுப்புகின்ற பழக்கம் அவருக்கில்லை. பழைய விஷயங்களை நவீனப்படுத்திச் சொல்லுவதில் அவருக்குத் தனியான திறமை இருக்கிறது. கீதைக்கு ஆங்கிலத்தில் அவர் எழுதியுள்ள விரிவுரை, கீதை பற்றி வெளிவந்துள்ள மிகச்சிறந்த விமர்சனங்களுள் ஒன்று என்பதில் சந்தேகமில்லை.

சங்கரராய் இருந்தாலும், வேறு எந்த மகா புருஷ ராய் இருந்தாலும் அனைவரையும் விமர்சனக் கண் ணோட்டத்துடன் பார்க்கச் சின்மயானந்தா தவறுவ தில்லை. அவர் சொல்லுகின்ற ஒரு விமர்சனத்தை இப் பொழுது பார்க்கலாம்.

''சங்கரரை, அவர் சொல்லுவதைத் தெளிவாகப் புரிந்துகொண்டவர்கள்கூட விமர்சிக்கக்கூடாது. இப் போது பக்தி என்னும் பெயரில் எது நம்மை வந்து அடைந்திருக்கிறதோ அது மூட நம்பிக்கைக் கொள்கை யின் பிரதிபலிப்புதான். நாற்றம் எடுத்துப்போனது. அருவருக்கத்தக்க அறிவுப்பூர்வமான அடிமைத்தனம். நமக்கு நாமே ஏற்படுத்திக்கொண்டுள்ள, நம்மைத் தூர அழைத்துச் செல்லுவதற்காகக் கண்மூடித்தனமாகக் கடவுளை நம்பச் சொல்லும் ஓர் ஏற்பாடு. இதனால், சுய நலம் தேடும் புரோகித வகுப்பினரால் விரும்பிப் போற் றப்படும் தன்னைத்தானே அழித்துக்கொள்ளும் ஒரு சமுதாயத்தை நாம் பார்க்கிறோம். இந்தக் கூட்டம், கோவில்கள் என்று அழைக்கப்படும் களங்கப்பட்ட ஆன்மிக நிலையங்களைத் தளமாகக்கொண்டு செயல் பட்டு வருகின்றது.

களங்கப்பட்டிருக்கும் இந்த நிலையங்களுக்குச் செல்லுகின்ற பக்தர்களும் தந்நம்பிக்கையற்றவர்களா கத் திகழ்கிறார்கள். இவர்களுக்கு வாழ்க்கையை எதிர் நோக்கும் துணிச்சலும் இருப்பதில்லை. வாழ்க்கையைத் துறக்கும் மன பலமும் இருப்பதில்லை. வாழவும் இவர் களுக்குத் தெம்பில்லை; அறிவுப்பூர்வமாக விசாரணை செய்யும் திறமையும் இல்லை. நம்பிக்கை கொள்கிற அளவுக்குக் கற்பனை வளமும் இல்லை. நம்பாத அளவிற் குத் துணிச்சலுமில்லை; இவர்கள் பாதி பயத்திலும்,

பாதி சந்தேகப்பூர்வமான நம்பிக்கையிலும் தெய்வ சன்னிதானத்தில் கூடி வழிபாடு நடத்துகிறுர்கள்."

இந்து மதத்தை இன்றைக்குப் பீடித்துள்ள நோயைச் சின்மயானந்தா வெகு அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறுர்.

யோகத்தைப்பற்றிச் சொல்லுகின்ற போது, கிழக்கு நாடுகளிலும் மேற்கு நாடுகளிலும் யோகத்தைப் பற்றிப் புத்தகங்கள் படிக்கின்றவர்கள், அதைப்பற்றித் தவருகப் புரிந்துகொள்ளுகிறவர்களாகவே இருக்கிருர்கள். யோகம் என்பது அற்புதமான சக்திகளைக் கொடுக்க வல்லது என்றும் உடலும் உணர்வுகளும் அமானுஷ்ய பலத்தைக் கொடுக்க வல்லன என்றும் எண்ணுகிருர்கள். தன்னை உணர்ந்துகொள்ளுவதற்கு அவர்கள் யோகத்தைப் பயிற்சி செய்வதில்லை என்று சொல்லுகிருர்.

சின்மயானந்தா உபநிஷதங்களையும் கீதையையும் நன்கு கற்றிருக்கிருர். உபநிஷதங்களை விமர்சனத்தோடு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அவரே வெளியிட்டிருக்கிருர். இவ்வாறு பதிஞெரு உபநிஷதங்களை அவர் வெளியிட்டிருக்கிருர்.

மற்ற பல சுவாமிகளைப்போலச் சின்மயானந்தா முகத்தைச் சோகமாகவோ தம்மை மறந்த நிலையில் இருப்பவர்களைப் போலவோ வைத்துக்கொள்ளுவதில்லை. எப்போதும் சிரித்த முகத்துடனும் உற்சாகமாகவும் காட்சியளிக்கிருர். நகைச்சுவைத் துணுக்குகளை அவர் ரசிப்பதோடு மற்றவர்களைச் சிரிக்க வைக்

கும் துணுக்குகளையும் அவரே சொல்லுகிறார். சின்மயானந்தரின் அணுகுமுறை அறிவுப்பூர்வமானது.

தமக்கு அதிசயமான ஆற்றல்கள் இருப்பதாக அவர் சொல்லுவதில்லை. உபநிஷதங்களின் உயரிய சிந்தனைகளை உலகிற்கு உணர்த்தி, மக்களை ஆன்மிக விழிப்புக்கொள்ளச் செய்வதுதான் அவர் நோக்கம்.

# 24. இந்து மதம் வளர்த்த தமிழ்

மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்களும் சரி, நம் நாட்டு ஆராய்ச்சியாளர்களுள் சிலரும் சரி, இந்து மத வளர்ச்சியில் தென்ஞட்டின்—குறிப்பாகத் தமிழ்நாட்டின்—பங்கிஊச்சரியாக மதிப்பிட்டுச் சொல்லாமலே விட்டு விடுகிருர்கள். இதற்குக் காரணம், இந்து மத வளர்ச்சிக்கு சமஸ்கிருதமே அடிப்படை என்கிற தவருன கருத்தாகும்.

வேதங்கள் சமஸ்கிருத மொழியில் இயற்றப்படவில்ஜல என்கிற விஷயம் இன்றைக்கும் பலருக்கும் தெரியாமலே இருக்கிறது. வேதங்கள் முதல் முதல் பிராகிருத மொழியில் பதிவு செய்யப்பட்டன. உபநிஷதங்களும் அப்படியே. பின்னரே இவை சமஸ்கிருத மொழியில் மொழிபெயர்க்கப்பட்டதை இந்தப் புத்தகத்தின் ஆரம்பத்திலேயே தெளிவாக எடுத்துக் கூறியுள்ளேன்.

ஆக, தெய்வ மொழி சமஸ்கிருதம் என்று சொல்லுவதற்கோ, சமஸ்கிருத மந்திரங்களே சக்தி வாய்ந்தவை என்கிற கூற்றுக்கோ எந்த விதமான ஆதாரமும் இல்ஜல. எண்ணங்களைச் சொல்லுவதால் மொழிக்கு வலிமை கிடைக்கிறதே தவிர, வெறும் மொழிக்கென்று

தனியான மகிமை எதுவும் இருக்க நியாயம் இல்லை.

தமிழ் வழிகாட்ட இறைவனே பின் நடந்து சென்ற தாகப் பாசுரங்கள் கூறுகின்றன. “பைந்தமிழின் பின் சென்ற பச்சைப் பசும் கொண்டலே” என்று பாடுகிறார் ஒரு பக்தர். குமரகுருபரரின் இனிய தமிழைக் கேட்க மீனாட்சி அம்மையே குழந்தை வடிவெடுத்து, பாண்டிய மன்னனின் மடியில் வந்து அமர்ந்து, குமரகுருபரரின் இனிய தமிழைக் கேட்டுப் பரவசப்பட்டதாக வரலாற் றுக் கதை ஒன்று உண்டு.

தென்னாட்டுச் சைவர்கள் ‘தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!’ என்று சிவனை வழிபடுகிறார்கள். சிவன் தென்னாட் டுக்குரிய கடவுள் என்பது சில ஆராய்ச்சியாளர் களின் முடிவு. இந்து மதம் பேதங்களை அடிப்படை யாகக்கொண்டு தோன்றிய மதம் எனக் கூறு வதைவிட, இந்தியத் துணைக்கண்டத்தில் வாழ்ந்த பல்வேறு மக்களின் வழிபாட்டு முறைகளும் பழக்க வழங்கங்களும் ஒருங்கிணைந்த மதம் எனக் கூறுவது இன்னும் சற்றுப் பொருத்தமாகக்கூட இருக்கலாம்.

ஏனெனில், சிவனை வழிபடுவது தென்னாட்டுக்கே உரிய தனிச்சிறப்பாக இருந்திருக்கிறது. சிவ வழி பாட்டை அடிப்படையாகக்கொண்ட சைவ சித்தாந்த கருத்துகள் தமிழகத்துக்கும் தமிழ் மொழிக்கும் சொந்தமானவையாய் இருப்பதைப் பார்க்கிறோம். சித்தம் என்றால் சிந்தனை அல்லது அறிவு என்று பொருள் கொள்ளலாம். சிந்தனையின் எல்லை அல்லது அறிவின் எல்லை சித்தாந்தமாகும். சிவ வழிபாட்டில் ஈடுபட்டவர்கள் இந்து மத வேதங்களை முழுக்க

முழுக்க நம்பியவர்களாகத் தோன்றவில்லை. வேதாந்த கருத்துகள் அவர்களின் சிந்தனைக்கு அடிப்படையாகவும் தோன்றவில்லை. சித்தாந்த கருத்துகளையே அவர்கள் அடிப்படையாகக் கொண்டார்கள். இதன் விளைவாகச் சைவ சித்தாந்தம் என்பது இந்து மதச் சிந்தனையின் மிக முக்கியமான கிளை ஆயிற்று.

தமிழில் இயற்றப்பட்டுள்ள பெரியபுராணம் போன்ற நூல்கள் தனித்தன்மை வாய்ந்தவை. சேக்கிழார் சுவாமிகள் நாயன்மார்களின் வரலாற்றை அற்புதமாக எடுத்துச் சொல்லி இருக்கிறார். சிவபெருமானின் திருவிளையாடல்கள் அடங்கிய நூல் திருவிளையாடற்புராணம். ஈஸ்வரனின் திருவிளையாடல்களும் சரி, நாயன்மார்களின் வாழ்க்கையும் சரி, தமிழ்நாட்டில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்தவை என்பதிலிருந்து, இந்து மதத்தின் வேறொரு முக்கியமான சிந்தனை ஓட்டம், தமிழகத்தில் செல்வாக்குடன் இருந்து வந்திருப்பதை உணர முடியும்.

அது போலவே, சிவ மதத்துக்கு மாறுபட்ட வைஷ்ணவ மதமும் தமிழகத்தில் தனித்தன்மையோடு இருந்து வந்திருக்கிறது. பன்னிரு ஆழ்வார்கள் வாழ்ந்து, திருமாலின் பெருமை பேசும் பாசுரங்களைப் பாடியிருக்கிறார்கள். தமிழ்மொழி மூலம் வைணவம் பக்தியை வளர்த்துத் தமிழையும் வளர்த்தது.

பண்டைய தமிழ் நூல்களில் சித்தர்கள் எனப்படும் சிந்தனையாளர்களின் ஆதிக்கத்தையும் பார்க்க முடிகிறது. உபநிஷதங்களை உருவாக்கிய பெரியவர்களைப் போலவே இவர்களும் இந்து மதத்தில் தனித்தன்மை கொண்ட சிந்தனையாளர்களாக விளங்கினார்கள். குறிப்பாகத் திருமூலர்,

"நட்ட கல்லைத் தெய்வமென்று
நாலு புட்பம் சாத்தியே
சுற்றி வந்து மொணமொணவென்று
சொல்லும் மந்திரம் ஏதடா !
நட்ட கல்லும் பேசுமோ
நாதன்உள் ளிருக்கையில் ?''

என்று பாடியிருக்கிறார். உபநிஷத கருத்துகளின் எதிரொலியாக இந்தக் கருத்து இருப்பதை நம்மால் அறிய முடிகிறது. உபநிஷத சிந்தனையாளர்கள் எவ்வாறு வேதங்களின் போக்குகளை எதிர்த்து, மத குருமார்களின் ஆதிக்கத்தை உடைத்து, சுய சிந்தனை வளர்ச்சியை இந்து மதத்தின் அஸ்திவாரமாக்க முயன்றார்களோ, அதைப் போலவே, தமிழ்நாட்டில் வாழ்ந்த சித்தர்களும் இந்து மதத்தில் வேகமாகப் பரவிவந்த மூட நம்பிக்கைகளுக்கு எதிராகச் சுய சிந்தனையை வளர்க்கும் தீவிரமான முயற்சிகளில் ஈடுபட்டார்கள்.

வேதங்களுக்கும் உபநிஷதங்களுக்கும் இடையே இருந்த முரண்பாடுகளை நீக்கி, அத்துவைதம் என்னும் அருமையான தத்துவத்தை ஆதிசங்கரர் மக்களுக்குச் சொன்னதைப் போலவே, சித்தர்களும் ஏறத்தாழச் சங்கரரின் அத்துவைதத்திற்கு ஒப்பான எண்ணங்களையே வெளியிட்டார்கள் என்பதை அவர்களின் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன :

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்''

என்று பாடுகிறார் திருமூலர்.

மரத்தால் செய்யப்பட்ட யானை உருவத்தைப் பார்க்கிறோம். அப்போது யானைதான் நம் கண்களுக்குத் தோன்றுகிறதே தவிர அது மரம் என்கிற உணர்ச்சி தோன்றுவதில்லை. ஆனால், மரத்தால் செய்யப்பட்டது அது என்கிற உணர்ச்சியோடு நோக்கும் போது, அது யானை வடிவம் என்பது மறந்துபோய், அது செய்யப்பட்ட மரம் கண்களில் பளிச்சென்று படுகிறது.

மரமும் யானைப் பொம்மையும் வெவ்வேறு அல்ல. ஒன்று இன்னொன்றாகத் தோன்றுகிறது. அதுபோலத்தான், ஜீவாத்மா என்றும் பரமாத்மா என்றும் தனித் தனியே பேசப்பட்டாலும், பரமாத்மாவின் ஒரு தோற்றந்தான் ஜீவாத்மா என்று ஆகிறது. இதுவே அத்துவைத சித்தாந்தத்தின் அடிப்படைத் தத்துவமாகும்.

சங்கரர் சொன்ன அத்துவைத தத்துவத்தைத் தான் திருமூலர் போன்ற சித்தர்களும் சொன்னார்கள்.

இந்து மதத்தின் வைஷ்ணவத் தத்துவத்தில் புரட்சிகரமான மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தவர் இராமானுஜர். இந்து மதத்தில் தோன்றிய மிகப் பெரிய சீர்திருத்தவாதி இவர். ஜாதி வேற்றுமைகளுக்கு எதிராகக் கடுமையாகப் போராடியவர். இன்னும் சொல்லப்போனால், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மத அறிவை ஏற்படுத்தி, பூணூலை அவர்களுக்குப் போட்டுவிட்டு மிகப்பெரிய புரட்சியைச் செய்தவர் இராமானுஜர். இராமானுஜரின் சிந்தனை ஆற்றலும் செயல்திறமும் இந்து மதத்தில் பெரியதொரு மறுமலர்ச்சி தோன்றுவதற்குக் காரணமாய் இருந்தன.

இராமானுஜரைப் போலவே மத்துவரும் தம் சித்தாந்தங்களின் மூலமாக இந்து மதத்தில் புதிய கண்ணோட்டத்தை உருவாக்கியவர் ஆவார்.

சங்கரர், இராமானுஜர், மத்துவர் ஆகிய மூவரும் தென்னகத்தின் முப்பெரும் ஆச்சாரியர்களாகப் போற்றப்படுகிறார்கள்.

தேவாரம், திருவாசகம், திவ்விய பிரபந்தங்கள் ஆகியவை தமிழையும் மத உணர்வையும் ஒருங்கே வளர்த்த, மிகச்சிறந்த பொக்கிஷங்களாகும். இவையன்றிப் பிற்காலத்தில் தாயுமானவர், பட்டினத்தார், அருணகிரிநாதர், இராமலிங்க அடிகள் போன்றோரும் இந்து மதத்தின் விழுமிய கருத்துகளைச் சாரமாக வடித்துக் கொடுத்த மிகச்சிறந்த சிந்தனையாளர்கள் ஆவார்கள்.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்திற்குப் பிறகு, புராணக் கதைகளை ஆதாரமாக வைத்துக் கதா காலட்சேபம் செய்யும் பெரியவர்கள் நிறையப் பேர் தோன்றினார்கள். அனந்தராம தீக்ஷிதர், பாலகிருஷ்ண சாஸ்திரிகள், திருமுருக கிருபானந்தவாரியார் ஆகியோர் இவர்களுள் சிலர். குறிப்பாகத் திருமுருக கிருபானந்தவாரியாரின் மதச்சொற்பொழிவுகள், ஏறத்தாழ அரை நூற்றாண்டுக் காலமாகத் தமிழக மக்களால் விரும்பிக் கேட்கப்பட்டுப் பாராட்டப்பட்டு வருகின்றன. அந்தத் துறையில் அவர் தமக்கென்று தனியான பாணி வகுத்துக்கொண்டு, இன்றைக்கும் சிறப்பாகச் செயலாற்றி வருகிறார். சென்னை முதல் தமிழகத்திலுள்ள பெரிய நகரந்தோறும் மத உபன்யாசங்கள் இன்றைக்கும் பெருமளவில் நடைபெற்று, மக்களால் விரும்பிக் கேட்கப்பட்டு வருகின்றன.

கம்பராமாயணம், பெரியபுராணம் போன்றவை பேரிலக்கியங்களாகத் திகழ்வதால், இவை வளர்க்கும் இலக்கிய ரசனையோடு மதஉணர்வும் தமிழனின் வாழ்க்கையில் இவற்றின் மூலம் தொடர்ந்து வளர்க்கப்பட்டு வருகின்றன.

தமிழகத்தில் செயல்பட்டு வரும் ஆதீனங்கள், அவைபெற்றிருக்கும் வசதிகள் அளவிற்கு மதத்திற்குச் சேவை செய்திருப்பதாகச் சொல்ல முடியாவிட்டாலும், ஆன்மிகத் தாகம் கொண்ட மடாதிபதிகள் இவற்றின் பொறுப்புகளுக்கு வந்த சமயத்தில், மதச்சிந்தனையை வளர்ப்பதில் இந்த ஆதீனங்கள் வகித்த பங்கினைக் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது. சமய மறுமலர்ச்சிக்கு ஆதீனங்கள் ஆற்ற வேண்டிய பங்கினைச் சரியாக ஆற்றவில்லை என்னும் கருத்து நிலவுவதையும் அலட்சியப்படுத்திவிட முடியாது.

இந்த மடாதிபதிகளின் வரிசையில் குன்றக்குடி அடிகளார் சற்று முற்போக்குக் கருத்துக் கொண்டவர்களாகச் செயலபடுகிறவர் எனச் சொல்லலாம். ஆனால், ஆன்மிகத்துக்குச் சம்பந்தமில்லாத சில பிரச்சினைகளில் இவர் அக்கறை காட்டும்போது இவரது சமயப்பணிக்கு அது இடையூருகிவிடுவதையும் பார்க்க முடிகிறது.

ஆனால், இன்றைய கால கட்டத்தில் நம்முடைய வேத வேதாந்த கருத்துகளுக்கு அருமையான முறையில் விளக்கம் சொலலி, மககள் மனத்தில் ஒரு மிகப் பெரிய ஆன்மிக மறுமலர்ச்சியை ஏற்படுத்தி வருகிறவர், காஞ்சிப் பெரியவர் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வர ஸ்ரீசந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள் ஆவார்.

இவரது அரிய தெய்விகப் பணியை அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

## 25. காஞ்சிப் பெரியவர்

உபநிஷத காலத்திலிருந்து இன்றுவரை எத்தனையோ சிந்தனையாளர்கள், தங்கள் சிந்தனைகளாலும் வாழ்க்கை முறைகளாலும் வழிகாட்டிகளாகத் திகழ்ந்து, இந்து சமயத்திற்கு வலிவும் பொலிவும் ஊட்டி வந்திருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழியில் சாதனை புரிந்தவர்கள் ஆவார்கள். அவர்கள் அனைவரைப்பற்றியும் சிறு குறிப்புகள் எழுதினால்கூட அதுவே பல்லாயிரம் பக்கங்கள் கொண்ட பெரிய நூலாக விரிந்துவிடும்.

இந்து மதம் ஏதோ ஒரு ஸ்தாபகரின் போதனைகளை அடிப்படையாகக்கொண்டு தோன்றியிருக்குமானால், அவருக்குப் பின்பு அவர் காட்டிய மார்க்கத்தின் வழியில் வந்தவர்கள், அவர் உபதேசங்களுக்கு விளக்கங்கள், வியாக்கியானங்கள், விரிவுரைகள் சொல்லி, அந்த மார்க்கத்தை வளப்படுத்தும் முயற்சிகளில் ஈடுபடுவார்கள்.

இந்து மதம் ஏனைய மதங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட மதம். பிரபஞ்ச ரகசியத்தையும்: பிறவியின் நோக்கத்தையும் வாழ்வில் கண்ணுக்குப் புலப்படாமல் மனிதனை இயக்கிடும் ஆற்றலையும்

ஆராய்கின்ற சிந்தனைகளின் தொகுப்பாக உருப்பெற்ற மதம் ஆதலால், இங்கே முரண்பாடுகள் நிறைய உண்டு; கருத்து மோதல்கள் உண்டு. ஆனால், குழப்பத்தின் விளைவாக இவை தோன்றியவை அல்ல. அவ்வாறு எண்ணுவது மிகவும் மேலெழுந்தவாரியான கண்ணோட்டம் ஆகும். மனித அறிவுக்குச் சவால் விடும் புதிர்களை அவிழ்க்க முயலும் முயற்சிகளில் மாறுபட்ட கருத்துக்களும் முரண்பட்ட எண்ணங்களும் இருப்பது தவிர்க்க முடியாதது.

ஒரு பல்கலைக் கழகத்தில் பல்வேறுபட்ட சாஸ்திரங்கள் போதிக்கப்பட்டாலும் அந்த சாஸ்திரங்களின் நோக்கம் பொதுவானது. வாழ்க்கையின் மேம்பட்ட நிலையைப் புரிந்துகொள்ள அந்த சாஸ்திரங்கள் துணையிருக்கின்றன. இந்த சாஸ்திரங்களை ஓர் இடத்தில் கற்றுத் தெளிய வாய்ப்பளிக்கும் அமைப்பே பல்கலைக் கழகம் என்று வழங்கப்படுகிறது.

இந்த அர்த்தத்தில் பார்த்தால், இந்து மதமும் ஒரு பல்கலைக்கழகம் போன்றதே. இந்தப் பல்கலைக் கழகத்தில் பல்வேறு சாஸ்திரங்களையும் கற்றுத் தெளியலாம். வான ஆராய்ச்சி பற்றிய அறிவானாலும், மருத்துவம் பற்றிய செய்தியானாலும், இசை, சிற்பம், ஓவியம் போன்ற கலைகளானாலும், வாழ்க்கையில் மனிதன் செம்மையாக வாழத் துணை நிற்கும் ஒழுக்க நெறிகளானாலும் வாழ்க்கையின் எந்தத் துறையானாலும் நம் ஞானிகள் மத உணர்வோடு கலந்தே அவை பற்றிய தங்கள் ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட்டிருப்பதைப் பார்க்க முடியும். ஒன்பது கிரகங்களின் சுழற்சியைக் கண்டவர்கள் அந்தக் கிரகங்களையும் தெய்வமாக்கி வழிபட்டார்கள். கலைகளைக்கூட

ஆண்டவனின் சிறப்பினை வெளிப்படுத்தும் படைப் புகளாகவே உருவாக்கினர்கள்.

இந்துக்களைப் பொறுத்த வரையில் மதத்தையும் வாழ்க்கையினையும் அவர்கள் வெவ்வேருகத் தனிமைப் படுத்திப் பார்த்தது இல்லை. மதந்தான் வாழ்க்கை, வாழ்க்கைதான் மதம். இவ்வாறு வாழ்க்கையையும் மதத்தையும் ஐக்கியப்படுத்தி உருவான இந்து சமூக அமைப்பில், வாழ்க்கையின் முரண்பாடுகள் அனைத் தும் மதத்திலும் இருந்தன. இது தவிர்க்க முடியாதது ஆயிற்று. ஆனல், உண்மையில் அவை முரண்பாடு களே அல்ல. திசைகளின் முரண்பாடுகள் போன்ற வையே இவை. எப்படி என்று விளக்குகிறேன்.

நீங்கள் ஓர் இடத்தில் நிற்கிறீர்கள். உங்கள் முகத் துக்கு நேராக உள்ளது கிழக்குத் திசை என்றும் முதுகுக்கு நேராக உள்ளது மேற்குத்திசை என்றும் வைத்துக்கொள்ளுங்கள். இப்போது நீங்கள் இருக்கும் இடத்திலிருந்து பத்தடி பின்னல் சென்றல், நீங்கள் முன்பு நின்ற இடம் உங்களுக்குக் கிழக்குத்திசையில் இருக்கிறது. அப்படிப் பின்னல் செல்லாமல் அந்த இடத்திலிருந்து பத்து அடி நீங்கள் முன்னல் சென்றல் அதே இடம் இப்போது, நீங்கள் இருக்கும் இடத்துக்கு மேற்கு ஆகிவிடுகிறது.

அதாவது, நீங்கள் முதலில் நின்ற இடம் ஒரு சம யம் கிழக்காக இருக்கிறது. அந்த இடம் இன்னெரு சமயம் மேற்காக இருக்கிறது. அந்த இடம் திசை மாற்றம் அடையவில்லை; அப்படியேதான் இருக்கிறது. நீங்கள் நின்ற நிலையை ஒட்டி அது கிழக்கென்றும் மேற்கென்றும் பெயரைப் பெறுகிறது. ஒரே இடம்

ஒரு சமயம் கிழக்காகவும் இன்னொரு சமயம் மேற்காகவும் இருப்பது அந்த இடத்தின் முரண்பாடு அல்ல. நீங்களாக மேற்கொண்டுள்ள நிலையின் முரண்பாட்டை அந்த இடத்தின் முரண்பாடாக எண்ணி மயக்கம் அடைகிறீர்கள்.

இந்து மதத்தை விமர்சிக்கின்றவர்கள் அதில் காண்கின்ற முரண்பாடும் இத்தகையதுதான். இந்து மதத்தின் அடிப்படை உண்மைகள் நிலையானவை. அதில் மாற்றம் இல்லை. ஆனால், அங்கு உண்மைகளைப் பரிசீலிக்க எடுத்துக்கொள்ளும் சிந்தனையாளர்களும் ஆராய்ச்சியாளர்களும் தாங்கள் மேற்கொள்ளும் நிலைகளின் முடிவுகளை நமக்கு எடுத்துச் சொல்லுகிறார்கள். அவ்வாறு சொல்லுகின்றபோது, அவர்கள் மேற்கொள்ளுகின்ற நிலைகளின் முரண்பாடுகளை இந்து மதத்தின முரண்பாடுகளாக எண்ணுவது நம் அறியாமையினையே குறிக்கும்.

ஆனால், நம் வாழ்நாளின் இந்த முரண்பாடுகளெல்லால் முரண்பாடுகளே அல்ல, இந்து மதத்தின் விழுமிய கருத்தோட்டத்தின் பல்வேறு நிலைகள் என்று, சராசரி மனிதர்களும் புரிந்துகொள்ளும் விதத்தில் எடுத்துச் சொல்லும் தெளிவும் ஞானமும் ஒழுக்கமும் ஒருங்கே அமையப்பெற்ற மகான் ஒருவர் நம்மிடையே வாழ்கிறார். அவர்தான் காஞ்சிப் பெரியவர்.

அவர் உபதேசங்களும் அருள் வாக்கும் போதனைகளும் இந்து மதத்தின் தாத்பரியத்தைச் சாதாரண மனிதர்களும் புரிந்துகொள்ளும் விதத்தில் அற்புதமாக அமைந்து, இந்துக்களுககு அவை வழிகாட்டிக் கொண்டிருக்கின்றன. இந்து மதம் ஒரு மதச்சார்பற்ற

மதம் என்பதை அவர் தெளிவாக எடுத்துக் காட்டி யிருக்கிறார்.

மதச்சார்பற்ற ஒரு மதம் எவ்வாறு இருக்க முடியும் என்கிற கேள்வி எழலாம். மதச்சார்பின்மையை ஆங்கி லத்தில் Secular என்று சொல்லுகிறோம். இந்து மதம் ஒரு secular Religion. காரணம், இறுக்கமான கோட் பாடுகளுக்குள் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டுள்ள மதம் அல்ல இந்து மதம். இந்து மதத்தை மதச் சார்பற்ற மதம் என்று ஏன் நாம் சொல்லுகிறோம்? காஞ்சிப் பெரியவரே இதற்குப் பதில் சொல்லுகிறார். அவர் வார்த்தைகளாலேயே காரணத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

"ஆனால், இந்து என்பது நமது பூர்விகப் பெயர் அல்ல. வைதிக மதம், சநாதன தர்மம் என்றெல்லாம் சொல்கிறோமே, அவைதான் பெயரா என்றால், அதுவும் இல்லை. நம்முடைய ஆதார நூல்களைப் பார்க்கும் போது இந்த மதத்துக்கு எந்தப் பெயருமே குறிப்பிடவில்லை.

"இதைப்பற்றி நினைத்த போது எனக்கு ரொம் பவும் குறையாக இருந்தது. இது இப்படி இருக்கட்டும்.

"ஒரு நாள் யாரோ, 'ராமு வந்திருக்கிறான்' என்று என்னிடம் சொன்னார்கள். உடனே நான் ஏதோ நினை வில் 'எந்த ராமு?' என்று கேட்டேன். 'எந்த ராமுவா? அப்படியானால் 'ராமு'க்களில் பல பேர் இருக்கிறார் களா!' என்று எதிர்க்கேள்வி கேட்டார்கள். அப்போது தான் எனக்குப் பழைய ஞாபகத்தில் இப்படிக் கேட்டு விட்டோம் என்று தெரிந்தது, எங்கள் ஊரில் ராமு என்ற பெயரில் நாலு பேர் இருந்தார்கள். எனவே அவர் களுக்குள் வித்தியாசம் தெரிந்துகொள்ளுவதற்காக

'கறுப்பு ராமு', 'சிவப்பு ராமு', 'நெட்டை ராமு', 'குட்டை ராமு' என்று சொல்லுவது வழக்கம். அதே நினைவில்தான் ஒரே ஒரு ராமு இருந்த ஊரிலும் 'எந்த ராமு' என்று கேட்டுவிட்டேன். ஒரே ராமு இருக்கின்ற இடத்தில் எந்த அடைமொழியும் போடவேண்டிய தில்லை.

"நம் மதத்துக்கு ஏன் பெயரில்லை என்பதும் உடனே புரிந்துவிட்டது. பல்வேறு மதங்கள் இருக் கின்ற போதுதான் ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு வித்தியாசம் தெரிவதற்காகப் பெயர் கொடுக்க வேண் டும். ஒரே மதம்தான் இருந்தது என்றால் அதற்குப் பெயர் எதற்கு?

"நமது மதத்தைத் தவிர மற்ற மதங்கள் ஒரு மகா புருஷரின் பெயரில் ஏற்பட்டவை. அந்தப் பெரியவருக்கு முன் அந்த மதம் இல்லை. புத்த மதம் என்றால், அது கௌதம புத்தரால் ஸ்தாபிக்கப்பட்டது. எனவே, அவ ருக்கு முன் அது இல்லை என்றாகிறது. ஜைன மதம் என்றால், அது மகா வீரர் எனப்படும் ஜினரால் ஸ்தா பிக்கப்பட்டது. கிறிஸ்து மதம் என்றால், கிறைஸ்டினால் (இயேசு கிறிஸ்து) ஸ்தாபிக்கப்பட்டது. என்றிப்படி ஒவ்வொரு மதமும் ஒரு பெரியவரால் உண்டாக்கப்பட் டது என்று தெரிகிறது. அந்தப் பெரியவர் இதை ஏற் படுத்தினார் என்னும் போதே அவருக்கு முன்னால் இது இல்லை என்று தெரிகிறது. இவ்வளவு மதங்களும் உண் டாவதற்கு முன்பே, நம் மதம் இருந்திருக்கிறது. இந்த ஒரு மதமே உலகமெல்லாம் பரவியிருந்திருக்கிறது. இதைத் தவிர வேறு மதம் இல்லாததால் இதற்குப் பெயர் குறிப்பிட வேண்டிய அவசியமே இருக்கவில்லை. இதை அறிந்தவுடன் முன்பு எனக்கு இருந்த குறை

மைறந்தது. அதோடு இந்த மதத்தைப்பற்றிக் கௌரவ புத்தியும் உண்டாயிற்று. சரி, இந்த மதம்தான் ஆதி மதம் என்றே இருக்கட்டும். அந்த ஆதி காலத்தில் இதை ஸ்தாபித்தவர் யார் என்ற கேள்வி வரும். பெயர் இல்லாத நம் மதத்தை யார் ஸ்தாபித்தார் என்று பார்த்தால், எத்தனையோ ஆராய்ச்சி செய்து பார்த்தாலும், அப்படி ஒரு ஸ்தாபகரைக் கண்டுபிடிக்கவே முடிய வில்லை. பிரம்ம சூத்திரம் செய்த வியாசரைச் சொல்ல லாமா என்றால், அவர்களும் தங்களுக்கு முன்னரே இருக்கின்ற வேதங்களைப்பற்றிச் சொல்கிறார்கள். சரி; இந்த வேத மந்திரங்களைச் செய்த ரிஷிகளை ஸ்தாபகர் கள் என்று சொல்லலாமா என்று பார்த்தால், அவர் களோ, 'நாங்கள் இந்த வேதங்களைச் செய்யவில்லை' என்கிறார்கள். 'பின்னே உங்கள் பேரில்தானே இந்த மந்திரங்கள் எங்களுக்கு கிடைத்திருக்கின்றன? ஒவ் வொரு மந்திரத்தையும் உபாசிக்கிறபோது அவற்றுக்கு உங்களில் ஒரு ரிஷியின் பெயரைச் சொல்லித்தானே தலையைத் தொட்டுக்கொள்கிறோம்?' என்று கேட்டால் அந்த ரிஷிகள், 'எங்கள் மூலம்தான் இந்த மந்திரங்கள் லோகத்துக்கு வந்தன என்பது வாஸ்தவம். அதனால் தான் எங்களை மந்திர ரிஷிகளாகச் சொல்லியிருக்கிறது. எங்கள் மூலம் வந்ததே ஒழிய, நாங்களே அவற்றைச் செய்யவில்லை (compose – பண்ணவில்லை) நாங்கள் அப் படியே மனமடங்கித் தியான நிஷ்டையில் இருக்கிற போது இந்த மந்திரங்கள் ஆகாசத்தில் எங்கள் முன்னே தெரிந்தன. நாங்கள் அவற்றைக் கண்டவர் கள்தான் (மந்த்ர த்ரஷ்ட); செய்தவர்கள் (மந்த்ர கர்த்தா) அல்ல' என்கிறார்கள்.

'சகல சப்தங்களும் ஆகாசத்திலே பிறக்கின்றன. அவற்றிலிருந்தே சிருஷ்டி உண்டாயிற்று. இதைத்

தான் Space-ல் ஏற்பட்ட vibration—களால் பிரபஞ்சம் உண்டானதாக ஸயன்ஸில் சொல்லுகிறார்கள். ரிஷிகள் தங்களது தபோ மகிமையால், இந்த சிருஷ்டியிலிருந்து ஜீவர்களைக் கடைத்தேற்றுகிற சப்தங்களை ஆகாசத்தில் மந்திரங்களாகக் கண்டார்கள். ஆனால், அவர்கள் செய்ததல்ல இம்மந்திரங்கள். புருஷர் எவரும் செய்யாத அபௌருஷேயமாக இந்த வேதங்கள் ஆகாச ரூபமான பரமாத்மாவிலேயே அவரது மூச்சுக் காற்றாக இருந்தவை. அவற்றை ரிஷி ச்ரேஷ்டர்கள் கண்டு உலகுக்குத் தந்தார்கள்.

'இப்படித் தெரிந்துகொண்டால் நம் மதத்தின் ஸ்தாபகர் யார் என்று தெரியவில்லையே என்பதும் ஒரு குறையாக இல்லாமல், அதுவே பெருமைப்படுகிற விஷயமாக இருக்கும். பரமாத்மாவின் சுவாசமாகவே இருக்கப்பட்ட வேதங்களை அநுஷ்டிக்கிற அநாதி மதத்தின் வாரிசுகளாக வந்திருக்கும் மகா பெரிய பாக்கியம் நமக்குக் கிட்டியிருக்கிறது என்று பூரிப்பு அடைவோம்.''

இந்து மதம் எவர் ஒருவராலும் உருவாக்கப்பட்ட மதம் அல்ல என்பதாலும், எல்லா மதங்களுக்கும் முற்பட்ட கால வரையறையைச் சரியாகக் கணித்துச் சொல்ல முடியாத மதம் என்பதாலும், இந்த மதத்தின் அடிப்படைக் கருத்துகளின் செல்வாக்கு பிற்காலத்தில் தோன்றிய மதங்களின்மீது இருந்ததைக் காஞ்சிப் பெரியவர் ஓர் எடுத்துக் காட்டின் மூலம் தெளிவுபடுத்துகிறார். அவர் சொல்லுகிறார்:

“ஹீப்ரூ மதத்திலுள்ள ஆதாம்—ஈவாள் கதையைக் (Adam and Eve) கேட்டிருப்பீர்கள்: அறிவு மரம் (Tree of knowledge) என்று ஒன்று இருந்தது. அதன் பழத்

தைப் புசிக்கக்கூடாது என்பது ஈசவராக்ஞை. ஆதம் அப்படியே சாபபிடாமல் இருந்தான். ஆனல், ஈவ் அதைச் சாப்பிட்டாள். அதன் பிறகு, 'வாழ்வோ தாழ்வோ அவளுக்கு என்ன சம்பவிக்கிறதோ அதுவே தனக்கும் சம்பவிக்கட்டும்' என்று ஆதமும் அந்தப் பழத்தைச் சாப்பிட்டான்' என்பது பைபிளிலுள்ள பழைய ஏற்பாட்டின் (old Testament) முதல் கதை (Genesis).

நம் உபநிஷ. தத்துவங்களுள் ஒன்றுதான் இப் படிக் கதா ரூபமாகியிருக்கிறது. அப்படி ஆகும்போது காலம், தேசம் இவற்றின் மாறுபாட்டால் குளறுபடி யும் உண்டாகியிருக்கிறது, மூலத் தத்துவமே மறைந்து போகிறுற்போல்.

உபநிஷத்தில என்ன சொல்லப்பட்டிருக்கிறது? 'பிப்பல மரத்தில் இரண்டு பட்சிகள் இருக்கின்றன. ஒன்று, பிப்பிலத்தைச் சாப்பிடுகிறது; இன்னென்று சாப்பிடாமல் மற்றதைப் பார்த்துக்கொண்டேயிருக் கிறது' என்று உபநிஷத்து சொல்லுகிறது. சரீரந்தான் அந்த விருட்சம். அதில் ஜீவாத்மாவாக ஒருத்தன் தன்னை நினைத்துக்கொண்டு, விஷயானுபவங்கள் என் னும் பழத்தைத் தின்றுகொண்டிருக்கிறுன்; இவன் ஒரு பட்சியாக இருக்கிறுன். அவன்தான் ஜீவனை ஆட வைக்கிறவன். ஆனுலும், அவன் ஆடுவதில்லை. சர்வ சாக்ஷியாக அவன் ஜீவனின் காரியங்களைப் பார்த்துக் கொண்டு மாத்திரம் இருக்கிறுன். இந்த ஜீவனுக்கு அவனே ஆதாரமானுலும அவன் விஷயங்களை அனு பவிப்பதோ — பழத்தைச் சாப்பிடுவதோ—அதற்கான கர்ம பலனை அனுபவிப்பதோ இல்லை. இதை உபநிஷ தம், பழம்—அதைச் சாப்பிட்ட பட்சி—சாப்பிடாத

பட்சி என்று கவித்வத்தோடு சொல்கிறது. சாப்பிடு பவன், ஜீவன்; சாப்பிடாதவன், பரம்பொருள்—தன்னை ஆத்மாவாகவே உணர்ந்திருக்கிறவன்.

இந்த ஜீவன்தான் ஹீப்ரு மதங்களில் ஈவ் ஆகி யிருக்கிறான். 'ஜீ' என்பது 'ஈ'யாவது ஒரு வியாகரண விதி. 'ஜ' வரிசை சப்தங்கள் 'ய' வரிசையாக மாறி விடுவது சகஜம். இப்படித்தான் யமுனா ஜமுனாவா யிற்று. 'யோகீந்திர' என்பது 'ஜோகீந்தர்' என்றா யிற்று. 'ஜீவ' என்பது 'ஈவ்' என்றாயிற்று. 'ஆத்மா' என்பது 'ஆதம்' ஆக மாறிவிட்டது. பிப்பலம் என் பது ஆப்பில் (apple) என்றாயிற்று. அறிவு விருட்சம் என்பதும் நம் 'போதி விருட்சம்' தான். 'போதம்' என் றால் ஞானம்! புத்தருக்குப் போதி விருக்ஷத்தின் கீழ் தான் ஞானம் உண்டாயிற்று என்பது எல்லாருக்கும் தெரிந்ததுதானே? ஆனால், அவருக்கும் முன்பே அரச மரத்துக்குப் போதி விருட்சம் என்னும் பெயர் இருந் தது.

உபநிஷதம் தூர தேசம் ஒன்றில், எத்தனையோ காலத்துக்குப் பிற்பாடு, மாறி மாறிப் புது ரூபம் எடுக் கிறபோது, மூல தாத்பரியம் மாறிப்போயிற்று. ஒரு போதும் விஷயானுபோகத்துக்கு ஆளாக முடியாத ஆத்மாவும் பழத்தைச் சாப்பிட்டதாக பைபிள் கதை திசை திருப்பிவிடுகிறது. விஷய சுகம் எல்லாம் அடி பட்டுப்போகிற அறிவை நம்முடைய போதி விருட்சம் குறிப்பிடுகிறது என்றால், அவர்களோ, விஷய சுகத்தை பழுக்கிற லௌகிக அறிவை Tree of Knowledge என்று சொல்லிவிட்டார்கள். ஆனாலும், நம் வேத மதம் ஆதி யில் அங்கேயிருந்திருக்கிறது என்பதற்கு இதிலிருந்து அத்தாட்சி கிடைக்கிறதோ இல்லையோ?"

இந்து மதம் பூர்விகமானது, அநாதியானது என்பதற்கும் அதன் செல்வாக்கு இதர மதங்களின்மீது எந்த அளவுக்கு இருந்தது என்பதற்கும் காஞ்சிப் பெரியவர் ஆதாரபூர்வமான திருஷ்டாந்தங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார். அது மட்டுமல்ல. ஆதிசங்கரர் உபதேசித்த அத்துவைத சித்தாந்தத்தைக் காஞ்சிப் பெரியவரைப் போல எளிமையாகச் சொன்னவர்கள் எவரும் இல்லை. சாதாரண மக்களும் புரிந்துகொள்ளும் விதத்தில் அத்துவைத தத்துவத்தை அவர் விளக்கியிருப்பதோடு, மேலான விஞ்ஞான அறிவு பெற்றவர்களும் நவீன அணு விஞ்ஞானத்துக்கான அஸ்திவாரமாக அத்துவைத தத்துவம் இருப்பதை ஒப்புக்கொள்ளும் வகையில் அருமையாக எடுத்துக்காட்டியிருக்கிறார். காஞ்சிப் பெரியவர் விளக்குகிறார்:

"அனைத்தும் ஒன்று என்பது எப்படிச் சரியாகும்? இத்தனை மாறுபாடுள்ள நானாவித வஸ்துக்களைப் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோமே!' என்று தோன்றலாம். ஒன்று, நாம் பிரத்தியட்சமாகக் காண்பது சத்தியமாக இருக்க வேண்டும்; அல்லது வேதாந்தம் சொல்வதும், ஞானிகளின் அநுபவமுமான அத்துவைதம் சத்தியமாக இருக்க வேண்டும்.

'சத்தியமாக இருப்பது எதுவோ அது மாறாத சாந்தியும் ஆனந்தமும் தர வேண்டும். நம் பிரத்தியட்ச வாழ்க்கையில் இந்த ஆனந்தமும் சாந்தியும் இல்லையே! வேதாந்தம் சொல்கிற அத்துவைதத்தில்தானே அவை இருக்கின்றன? அதை அனுபவிக்கும் ஞானிகள்தாம், மற்ற ஜனங்களுக்கு உள்ள துன்பமும் சஞ்சலமும் இல்லாமல் எப்போதும் சாந்தியாக, எப்போதும் திருப்தியாக, எப்போதும் ஆனந்தமாக இருக்கிறார்கள். இதி

லிருந்தே எல்லாம் ஒன்று என்ற அத்துவைதமே சத்தியம் என்ருகிறது அல்லவா? சொப்பனத்தில் எத்தனையோ வஸ்துக்களைப்பார்க்கிருேமே, நாம் விழித்துக் கொண்டவுடன் அவையெல்லாம் என்ன ஆயின? சொப்பனம் கண்ட ஒருவன் மட்டும் தானே எஞ்சி நிற்கிருன்? அப்படியே இந்த லோகமெல்லாமும் ஒரு சொப்பனந்தான். மாயை நீக்கி ஞான நிலையில் விழித்துக் கொண்டால் அப்போது ஒரே பரமாத்மா மட்டுமே எஞ்சி நிற்பதை அனுபவிக்க முடியும்.

'காண்கிற உலகம் பலவிதமாக இருந்தாலும், ஒன்றேதான் இத்தனையும் ஆகியிருக்கிறது என்பதை நவீன சயன்ஸ் தெளிவாக ஒப்புக்கொண்டு நிலை நாட்டுகிறது. ஐம்பது வருஷங்களுக்கு முன் உலக வஸ்துக்கள் எல்லாம் எழுபத்திரண்டு மூலப் பொருள்களுக்குள் (elements) அடங்குவதாக ஸயன்ஸ் சொல்லி வந்தது. இந்த மூலப்பொருள்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவை என்பதே அன்றைய கருத்து. ஆனுல், இப்போது அணு (Atom) பற்றிய அறிவு விருத்தியான பின், இந்த மூலப் பொருள்கள் எல்லாமும்கூட வேறு வேருன பொருள்கள் அல்ல என்றும், ஒரே சக்தி (energy) தான் இவை எல்லாமாகவும் ஆகியுள்ளது என்றும் ஸயன்ஸ் நிபுணர்கள் நிலை நாட்டியிருக்கிருர்கள். பொருள் (matter), சக்தி (energy) இவையும் வேறு வேருனவை அல்ல என்று நவீன ஸயன்ஸ் சொல்லுகிறது. ஆக, அத்துவைதம்தான் ஸயன்ஸும் நமக்குக் காட்டுகிற உண்மை. ஐன்ஸ்டைன், ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் போன்ற பிரபல ஸயன்ஸ் நிபுணர்கள் உபநிஷதமும் சங்கர பகவத் பாதாளும் உபதேசித்த அத்துவைத சித்தாந்தத்துக்கு மிகவும் நெருங்கி வந்துவிட்டார்கள்.

"உலகம் மாயை என்று அத்துவைதம் கூறுவதற்குப் பொருள் யாதெனில், 'உலகம் இறுதி சத்யமல்ல; இது விவகாரத்துக்கு மட்டுமே சத்தியம்; இதனுடைய இருப்பும் பிரம்மம் என்ற ஒன்றைச் சார்ந்ததே' என்பது தான். இதையே மேற்சொன்ன ஸயன்ஸ் நிபுணர்களும் சொல்கிருர்கள். பிரம்மமே பாரமார்த்திக சத்தியம்; உலகம் விவகாரிக சத்தியமே என்று அத்துவைதம் சொல்வதைத்தான் இவர்கள் "உலக இயக்கமெல்லாம் இன்னொன்றைச் சார்ந்தவை ("reletive") தான்; முழு உண்மை ("absolute") அல்ல" என்கிருர்கள். சக்தியும் பொருளும் ஒன்று என்ற பெரிய உண்மையைக் கண்ட அணு விஞ்ஞானிகள், அந்த அறிவைக்கொண்டே அணுகுண்டைக் கண்டுபிடித்திருக்கிருர்கள் என்பது தான் துக்கமாக இருக்கிறது. வெளி உலக வஸ்துக்களைக் குறித்து ஸயன்ஸால் நிலை நாட்டப்படும் அத்துவைதம், புத்தி மட்டத்தோடு நின்றதன் அனர்த்தம் இது. அத்துவைதம் வெறும் அறிவோடு நிற்காமல் மக்களின் பாவனையிலும் தோய வேண்டும். ஜீவகுலம் எல்லாம் ஒன்றுதான் என்ற ஞானமும் ஸயன்ஸ் வழியாக ஏற்பட்டால், அணுகுண்டைத் தயாரித்த நவீன ஸயன்ஸே ஆத்மஹானிக்குப் பதிலாக மகத்தான ஆத்ம க்ஷேமம் செய்ததாகவும் ஏற்படும்."

பெரும்பாலும் இந்து மதக் கொள்கைகளைப் பரப்புவதற்குத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டுள்ளதாகச் சொல்லுகின்ற மகான்களும் சாதுக்களும், அற்புதங்களை நிகழ்த்துவதிலும், வெளிநாட்டுச் சீடர்களை வசீகரிப்பதிலும் மிகுதியான ஆர்வம் காட்டுகின்றனர். ஆனால், காஞ்சிப் பெரியவரைப் பொறுத்தவரையில் இம்மாதிரியான காரியங்களில் அவர் அக்கறை காட்டுவதில்லை. இந்து மதத்தின் உயரிய தத்து

வங்களை மக்களுக்குத் தெளிவாக எடுத்துச் சொல்வ தோடு மட்டுமன்றி, அந்த நெறிகளை வாழ்ந்து காட்டும் கர்ம யோகியாகவும், அப்பழுக்கற்ற ஆன்மிகத் தலைவ ராகவும் விளங்கிவருவது காஞ்சி மாமுனிவரின் தனிச் சிறப்பாகும். கீதையில் சொல்லப்பட்டுள்ள நிஷ்காம கர்ம யோகத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அவர் விளங்கி வருகிறார். இதனால் அவரை நடமாடும் தெய்வ மாக இந்துக்கள் கருதிப் போற்றுவதில் வியப்பு ஏது மில்லை.

துறவிகளுக்கெல்லாம் ஒரு துறவியாக அவர் வாழ்ந்தாலும், லௌகிக பிரச்சினைகளில் கிடந்து அல் லற்படுவோருக்கும் தமது உபதேசங்களின் மூலம் தெளிவான வழிகாட்டுகிறார். ஜன சமூகத்தின் ஆசா பாசங்களுக்கு அவர் தம்மை ஆட்படுத்திக்கொள்ளுவ தில்லையே தவிர, ஜனங்கள் சுபிட்சமாக அமைதியான வாழ்வு வாழும்பொருட்டு எப்போதும் தவமேற்றிக் கொண்டிருக்கிறார்.

இருபதாம் நூற்றாண்டில் இந்து மதத்திற்குச் சிறப்புச் செய்தவர்களுள்—பெருமை தேடித் தந்தவர் களுள்—காஞ்சிப் பெரியவர் குறிப்பிடத்தக்கவர். அவர் வாழ்க்கையும் உபதேசங்களும் இந்து மதத்திற்கு மட்டுமன்றி ஆன்மிக நெறியில் அக்கறை கொண் டுள்ளவர்களுக்கும், எதிர்காலத்திலும் ஞான விளக் காய் திகழ்ந்து வழிகாட்டிக் கொண்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

## 26. விஞ்ஞான மதம்

இந்து மதச் சிந்தனைகள் விழுமியவை; மேலானவை; பயனுடையவை; பண்பாட்டை வளர்ப்பவை. கலை உணர்வைத் தோற்றுவிப்பவை. சமூகக் கட்டுக் கோப்புக்கும் அமைதிக்கும் வழி காட்டுபவை. ஆன்ம தரிசனத்தை உணரச் செய்பவை. ஈடு இணையில்லாதவை. அன்றிலிருந்து இன்றுவரை அழியாமல், புதுப் புது எண்ணங்களை அரவணைத்துக்கொண்டு பரிணும ரீதியில் வளர்ச்சி பெற்று வருபவை.

இந்து மதத்தின்மீது ஏனைய சமயத்தவர் போர் தொடுத்து, இந்து கலாச்சாரத்துக்கு முரண்பட்ட கலாசாரங்கள் ஆக்கிரமிப்பைச் செய்ததுண்டு. இந்து மதத்திலேயே பல புல்லுருவிகள் தோன்றி, இந்து சமயத்தின் கோட்பாடுகளுக்கு விபரீத வியாக்கியானங்கள் செய்து, தங்கள் சுயநலத்தை வளர்த்துக்கொள்ள முயன்றதுண்டு. ஆனுல், அத்தனைக்கும் ஈடுகொடுத்து இந்து மதம் இன்றுவரை ஜீவ சக்தி உள்ள மதமாக இருந்து வந்திருக்கிறது என்று சொன்னுல் அதற்குக் காரணம் இதன் அடிப்படைக் கருத்துகள் ஆழமானவையாகவும் அழுத்தமானவையாகவும் இயற்கை போக்குகளுக்கு ஒத்தனவாகவும் இருந்தமையே ஆகும்.

வரலாற்று ரீதியாகப் பார்த்தால், இந்திய மண்ணில் ஆக்கிரமிப்புச்செய்த ஏனைய மதங்கள்கூட இந்து மதத்தின் கலாசார பாதிப்புகளுக்கு உள்ளாகியிருக்கின்றனவேதவிர, இந்துக் கலாச்சாரத்தின் விளிம்பைக் கூட அந்த மதங்களால் தொட்டுப் பாதிக்கச் செய்ய இயலவில்லை.

வன்முறையில் இந்துக்கள் மதம் மாற்றப்பட்டார்கள். பணத்தாசை காட்டி, பதவி ஆசை காட்டி இந்துக்கள் மதம் மாற்றப்பட்டதுண்டு. ஆனால், இந்து மதத்தின் ஆழமான தத்துவங்களையும் வாழ்க்கையை மேம்படுத்தும் கோட்பாடுகளையும் உணர்ந்த எவரும், இந்து மதத்தை விட்டு ஏனைய மதத்திற்குச் சென்றதாகச் சொல்ல முடியாது.

இந்து சமயத்தில் மத மாற்றத்துக்கான வழிமுறைஏதுவும் வகுக்கப்படவில்லை. கீதையில் கண்ணன் சொல்லுகிறான் : "என்னை அடைவதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன. எந்த வழியை எவர் தேர்ந்தெடுத்துக்கொண்டாலும் முடிவில் அவர்கள் என்னை வந்து அடைகிறார்கள்."

இதர மதங்களெல்லாம் தங்கள் தங்கள் மதங்களின் கோட்டுபாடுகளைப் பின்பற்றினால் மட்டுமே மனிதனுக்கு விமோசனம் உண்டு என்று சொல்லுகின்றன. அந்தக் கோட்பாடுகளைப் பின்பற்றாதவர்களை அஞ்ஞானிகள் என்றும், ஆன்ம விமோசனம் பெறத் தகுதியில்லாதவர்கள் என்றும் அவதூறு சொல்லுகின்றன. ஆனால், இந்து மதத்தைப் பொறுத்த வரையில், யார் எந்த வழியைப் பின்பற்றினாலும, அந்த வழி நல்ல வழியாக இருக்குமானால், அவருக்கு ஆன்ம விமோசனம் உண்டு என்று அடித்துச் சொல்லுகிறது. இதனால்

தான், யாரையும் மத மாற்றம் செய்ய வேண்டும் என்னும் கருத்து இந்து மதத்தில் இல்லாமல் போயிற்று.

இந்த விஷயம் பற்றிக் காஞ்சிப் பெரியவர் அழுத்தமாகவும் வரலாற்று ஆதாரங்களோடும் இந்து மதத்தின் மேன்மையை எடுத்துக் காட்டியிருக்கிறார், அவர் கூறுகிறார்:

"இந்து மதஸ்தர்கள் ரொம்பவும் பெருமைப்பட வேண்டிய அம்சம், இந்த மதம் ஒன்றுதான், தன்னை அனுசரிப்பதன் மூலமே ஒரு ஜீவன் உய்வு பெற முடியும் என்று தனி உரிமை (exclusive right) கொண்டாடிக் கொள்ளாமலிருப்பதேயாகும். யார் யார் எங்தெந்தச் சமய மார்க்கத்தில் போனாலும், கடைசியில் ஒரே பரமாத்மாவிடம் வந்து சேருவார்கள் என்பதை ஒப்புக் கொள்ளுகிற விசால மனப்பான்மை (catholic outlook) நம் சாஸ்திரங்களிலேயே காணப்படுகிறது. இதனால் தான் பிறரை இந்துவாக மதமாற்றம் (conversation) செய்ய நம் சாஸ்திரங்கள் இடம் கொடுக்கவில்லை.

இயேசு கிறிஸ்துவின் உபதேசங்களைப் பின்பற்றாதவர்களெல்லாம் நரகத்துக்குத்தான் போவார்கள்; முகமது நபி (Prophet)யின் உபதேசத்தை அனுசரிக்காதவர்களுக்கு கதி மோக்ஷம் இல்லை என்றெல்லாம் அந்தந்த மதஸ்தர்கள் சொல்லுகிறார்கள். அவர்களிடம் நாம் கோபப்படக்கூடாது. அவர்கள் வாஸ்தவமாகவே அப்படி நினைக்கலாம். அந்தந்த மதத்தில் இருப்பதால் தங்களுக்குக் கிடைத்திருக்கிற நிறைவைப் பார்த்து, மற்றவர்களுக்கு இத்தனை நிறைவு இருக்க முடியாது என்று நினைத்து, நல்லெண்ணத்தின் பேரிலேயே மற்றவர்களையும் தங்கள் வழிக்கு மாற்ற ஆசைப்படுகிறார்கள் என்றே வைத்துக்கொள்ளலாம். வெளிப் பார்

வைக்குக் கெடுதலாகத் தோன்றுகிற வழிகளைக் கடைப் பிடித்தாவது ஒரு நல்ல லட்சியத்தைச் சாதிக்கலாம் என்று நினைத்தே அவர்கள் பல விதமான முறைகளைக் கையாண்டு மற்றவர்களைத் தங்கள் மதத்துக்கு இழுக் கிறார்கள் என்று வைத்துக்கொள்ளலாம். அவர்கள் படை எடுத்து, சண்டை போட்டு, வாள் மூலம்கூட மத மாற்றத்தைச் செய்தது இப்படித்தான் என்று வைத் துக்கொள்ளலாம். இஸ்லாம் பெரும்பாலும் ஆயுத பலத்தாலேயே விஸ்தரிக்கப்பட்டது; கிறிஸ்துவ மதம் பண பலத்தால் விஸ்தரிக்கப்பட்டது என்று சொல்லு வதுண்டு. கிறிஸ்துவர்களும் படை எடுப்புகள் செய் தார்கள். ஆனால், மிஷனரிகளின் பரோபகாரப் பணியும் சேர்ந்துகொண்டது. பாலைவனமான அராபிய தேசத் தைச் சேர்ந்த முஸ்லீம்களுக்கு இல்லாத பண வசதி வெள்ளைக்காரர்களுக்கு இருந்தது. மிஷனரிகள் பள்ளிக் கூடம், ஆஸ்பத்திரி என்றெல்லாம் வைத்து, ஏழை எளி யவர்களை அழைத்து, அப்படியே அவர்களைத் தங்கள் மதத்தில் தள்ளிக்கொண்டார்கள்.

பலவந்தத்தையோ அல்லது உதவியைக் காட்டி வசியப்படுத்துவதையோ நாம் ஏற்காமலிருக்கலாம். ஆனால், தங்கள் மதத்தைப் பரப்பினால் எல்லோருக்கும் க்ஷேமம் உண்டாகும் என்று அவர்கள் நிஜமாகவே நம்பியிருப்பார்கள் என்பதை நாம் சந்தேகிக்க வேண் டாம்.

ஆனால், அவர்கள் நம்பிக்கை சரிதானா? கிறிஸ் துவை, நபியைப் பின்பற்றாவிட்டால் நரகம்தானா? கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் இந்தத் தனிப் பாத்தி யதை (exclusive right) செல்லுபடியாகாது என்று தெரி கிறது. ஏனென்றால், கிறிஸ்து வந்து இரண்டாயிரம்

வருஷங்கள்தான் ஆகிறது. அதற்கு முன் ஆயிரம், பதினுயிரம், லக்ஷம் வருஷங்களாகப் பிறந்து செத்துப் போனவர்கள் எல்லோரும் என்ன ஆனுர்கள்? இவர் களுடைய சித்தாந்தப்படி அவர்கள் கிறிஸ்து அல்லது நபியைத் தங்கள் ரக்ஷகராகக் (Saviour) கொள்ளாததால், சிருஷ்டி தோன்றிய நாளிலிருந்து அன்றுவரை வந்த வர்களெல்லாம் நரகத்துக்குத்தான் போயிருக்க வேண் டும். இப்போது இந்த மதங்களில் இருக்கின்றவர்களின் முன்னேர்கள், இவர்களுடைய மதஸ்தாபகர்களின் முன்னேர்கள், கூடத்தான், ஸ்வர்க்கம் போயிருக்க முடி யாது. இவர்கள் இந்துக்களைப் போல் பல ஜன்மங்கள் உண்டு என்பதையும் ஒப்புக்கொள்ளவில்லை. அப்படி ஒப்புக்கொண்டாலாவது கிறிஸ்துவுக்கும் நபிக்கும் முற் பட்டவர்கள் மறுபடி மறுபடி பிறக்கிற போது இந்த இரண்டு பேருக்குப் பிற்பாடும் ஜன்மா எடுத்து, இவர் களை அனுசரிக்கிற வாய்ப்பு (chance) பெற்று, கதி மோட்சம் அடைய வழி இருக்கிறது என்று சமாதானம் சொல்லலாம். ஆனல், இந்த மதங்களிலோ ஜீவனுக்கு ஒரே ஜன்மாதான் என்று சொல்லி இருக்கிறது. ஆதலி னல், எத்தனையோ ஆயிரம் பல்லாயிரம் தலைமுறை களாகத் தோன்றிய அத்தனை ஜனங்களும் கூண் டோடு நரகத்துக்குத்தான் நிரந்தர வாசமாக போயி ருக்க வேண்டும் என்ருகிறது. தான் சிருஷ்டித்த ஜனங்களுக்கு லக்ஷோபலக்ஷம் வருஷங்கள் வழி காட்டுகிற ஆச்சாரியர்களையே அனுப்பி வைக்காமல் அவர்களை மீளா நரகத்தில் போடுபவனுக ஒரு கடவுள் இருக்கிருன் என்ருல், அப்படிப்பட்ட இரக்கமே இல் லாத கடவுளை எதற்காக ஆராதிக்க வேண்டும், எதற் காக அவனை அடைய வேண்டும்? அதாவது, கடவுளை

அடைவதற்காக ஏற்பட்ட மதமே வேண்டாம் என்று சொல்லிவிடலாம்.

இதனாலேயே இந்து மதத்தினர் தம் மதத்தைத் தான் மற்றவர் பின்பற்ற வேண்டும் என்று ஒரு போதும் வற்புறுத்தியதில்லை. விஞ்ஞானம் எப்படி ஓர் அறிவு விளக்க விஷயமாக அமைந்திருக்கிறதோ, அதைப் போலவே, இந்து மதக் கோட்பாடுகளும் அறிவு விளக்க விஷயங்களாகவே இருந்து வந்திருக்கின்றன.

பொருளின் தன்மைகளை ஆராய்வது விஞ்ஞானம் என்றால், மனிதனுக்கும் பிரபஞ்சத்துக்கும் உள்ள தொடர்பினை ஆராய்வது இந்து மதமாய் இருந்திருக்கிறது.

எந்தக் கருத்துக் கொண்டவர்களும் எவ்வாறு விஞ்ஞான உண்மைகளை அறிந்துகொள்வதற்குத் தடை இல்லையோ, அதைப் போலவே, எந்தக் கருத்துக் கொண்டவர்களும் இந்து மதம் சொன்னவற்றைத் தெரிந்துகொள்ளுவதற்கு இந்து மதத்தில் தடை ஏதும் இல்லை.

இந்த அடிப்படையில் பார்த்தால், இந்து மதம் ஒன்றுதான் பகுத்தறிவுக்கொத்த மதமாக—இயற்கையின் போக்குகளுக்கு முரண்படாத மதமாக—இருப்பது தெரிய வரும்.

அதனாலேயே இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் போற்றி வழி காட்டியாகக்கொள்ளும் பஞ்சாங்கம், பல கணித உண்மைகளைக் கொண்டதாக இருக்கிறது. அறிவுக்குப் பொருத்தமில்லாத சில விஷயங்கள் அதில் அடங்கியிருந்தாலும் பஞ்சாங்கத்தில் காணப்படும் பெரும்பாலான விஷயங்கள் கணித ரீதியான உண்மைகளாகக் காட்சியளிக்கின்றன.

இந்து மதத்திற்குப் பல்வேறு விதங்களிலும் பலம் சேர்த்த - அதன் அடிப்படைத் தத்துவங்களுக்கு அருமையான விளக்கம் சொன்ன—பல சிந்தனையாளர் களைப்பற்றி இந்த நூலில் ஒருவாறு வரிசைப்படுத்திக் குறிப்பிட்டுள்ளேன். அனைவரைப்பற்றியும் இதில் நான் சொல்லி இருப்பதாகச் சொல்ல முடியாது. வேத உபநிஷத காலத்திலிருந்து இன்றுவரை எத்தகைய மாறுபட்ட, வேறுபட்ட கருத்தோட்டங்கள் இந்து மதத்தில் இருந்து வந்திருக்கின்றன என்பதை ஓரள வுக்கு இந்த நூலில் எடுத்துக் காட்டியுள்ளேன்.

இவர்களின் கருத்து மோதல்களால் இந்து மதம் பலவீனம் அடையவில்லை. மாறாக, உரம் பெற்று வளர்ந்து வந்திருக்கிறது. காரணம் என்ன? அடிப் படைகள் நிலையான உண்மைகளின்மீது அமைந்திருப் பதால் வாதப் பிரதிவாதங்களாலும், வியாக்கியான விமர்சனங்களாலும் இந்து மதம் ஒருபோதும் பாதிப்பு களுக்கு உள்ளாவதில்லை.

நடு மையமான அடி மரத்தைக் கொண்டுள்ள ஆலமரம், எத்தனையோ விழுதுகளை விடுகிறது. அத் தனை விழுதுகளும் பூமியில் வேரூன்றி வளர்ச்சி பெற்று ஆலமரத்தின் மூலப் பகுதிக்குப் பலமாவதைப் போல, இந்து மதச் சிந்தனையாளர்களின் பல்வேறு எண்ணங் கள், இந்து மதம் என்னும் ஆல மரத்துக்கு விழுது களாகி வலிமை சேர்த்துக்கொண்டிருக்கின்றன.

இருந்தும், இன்றைய கால கட்டத்தில் இந்துக்கள் தங்களின் உன்னதமான மதத்தின் அருமை பெருமை களைச் சரிவர அறிந்து வைத்திருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது.

காரணம் என்ன என்று அடுத்த அத்தியாயத்தில் சற்று விரிவாகவே ஆராயலாம்.

## 27. இன்றைய நிலை

ஏனைய மதங்கள் உலகத்தின் பல்வேறு பகுதியி லுள்ள மக்களால் பின்பற்றப்பட்டு வருகின்ற நிலையில், இந்து மதம் மட்டிலும் இமயம் முதல் குமரி வரை உள்ள இந்தியாவென்னும் பெரிய நிலப்பரப்பில் வாழ் கின்ற மக்களால் மட்டுமே பின்பற்றப்பட்டு வருகின் றது. இதை இந்து மதத்தின் பலக்குறைவாக எண்ண வேண்டிய அவசியம் இல்லை. ஏனைய மதங்கள்—புத்த மதம் உட்பட -மத மாற்றத்திற்கு முயற்சிகளை மேற் கொண்ட போது, இந்து மதம் அத்தகைய முயற்சி களை மேற்கொள்ளாததும் இதற்கு ஒரு காரணம். தவிர, இந்திய நிலப்பரப்பில் வாழ்கின்ற மக்களின் பழக்கவழக்கங்களும் இந்து மதமும் ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாதபடி பின்னிப் பிணைந்தவை. இந்திய மக்களின் வாழ்க்கைச் சிந்தனைகளோடு ஒட்டியே இந்து மதமும் பரிணும வளர்ச்சி பெற்று வந் திருக்கிறது.

மேலே சொன்ன காரணங்களால் இந்தியாவில் வாழும் இந்துக்களின் பொறுப்பு மகத்தானது ஆகும். இந்து மத உணர்வையும், கலாச்சாரத்தையும் போற்றிப் பாதுகாக்க வேண்டிய பெருங்கடமை இந்துக்களுக்கு இருக்கிறது. இந்தக் கடமையை நாம் சரிவரச் செய்கி

ருமா என்று எண்ணிப் பார்க்க வேண்டும். இந்துக்கள் மற்றவர்களை மதமாற்றம் செய்யும் முயற்சியில் ஈடுபட அவசியம் இல்லையாயினும், பணத்தாசை காட்டியும் பதவி ஆசை காட்டியும், பயமுறுத்தியும் இந்துக்களை ஏனைய மதத்தினர் மத மாற்றம் செய்வதைத் தடுக்கும் முயற்சியிலாவது நாம் ஈடுபட வேண்டாமா?

இந்துக்கள் ஏன் மதம் மாறுகிறார்கள் என்பதைப் பற்றி முதலில் நாம் தீர்க்கமாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். யார் மதம் மாறுகிறார்கள், இந்துக்களுள் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர்களும் பொருளாதார இனத்தில் பின்தங்கியவர்களுமே மதம் மாறுகிறார்கள். இவ்வாறு இந்து மதத்திலிருந்து பிற மதங்களுக்கு மாறிச் செல்லுகின்றவர்கள், நம் மதத்தையும் பிற மதத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து, நம் மதத்தைவிட அந்த மதங்களில் உயர்ந்த சிந்தனைகள் இருக்கின்றன என்று எண்ணியோ அல்லது ஆன்மிக விமோசனம் கிடைக்கும் என்று நம்பியோ மதம் மாறுவதில்லை.

மாறாக, அவர்களை இந்த மாற்றத்திற்குத் தூண்டுவது எது என்று பார்த்தால், ஏனைய மதங்கள் பொருளாதார நிலையில் அவர்களுக்கு அளிக்கும் வாய்ப்பும் வசதியுமே காரணம் என்பது புலனாகும்.

குறிப்பாக, ஹரிஜன்களும் இந்து சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட நிலையில் வைக்கப்பட்டுள்ள ஜாதியினருமே இந்த மத மாற்றத்திற்குப் பலியாகிப் போகிறார்கள். ஜாதிகளின் அடிப்படையில் சமூகத்திலிருந்து அவர்களை ஒதுக்கி வைக்கும் ஒரு தவறான பழக்கம் எப்படியோ இந்து மதத்தில் புகுந்துவிட்டது. இதன் விளைவாக ஆலயத்திற்குள் நுழைகின்ற உரிமைகளைக்கூட

இழந்தவர்களாக அவர்கள் ஆக்கப்பட்டார்கள். எந்த இடத்தில் மக்கள் அனைவரும் சமம என்று மதிக்கப் பட வேண்டுமோ அந்த இடத்தில் நுழைவதற்குக்கூட உரிமையற்றவர்களாக அவர்கள் ஆனார்கள். கடவுள் குடி கொண்டுள்ள கோவிலிலிருந்து அவர்களை ஒதுக் கிய போது நம்மை அறியாமலே இந்து சமுதாயத்திட மிருந்து அவர்களை ஒதுக்கி வைத்துவிட்டோம்.

சமுதாய ரீதியிலும் ஆன்மிக ரீதியிலும் நம்மால் அவமானப்படுத்தப்பட்டவர்கள் அவர்கள். பொருளா தாரத்துறையிலும் கல்வித்துறையிலும் அவர்கள் தாழ்ந்து போனார்கள். இந்துக்களுள் ஒதுக்கப்பட்ட இந்தப் பிரிவினர் வாழும் இடங்கள், மத மாற்றம் செய்ய விரும்பும் வேறு மதத்தினரின் வேட்டைக் காடாயிற்று. மதம் மாறினால் சமூக அந்தஸ்து அவர் களுக்குக் கிடைக்கும் என்று எடுத்துச் சொல்லப்பட் டது. பொருளாதார வாழ்க்கையில் மேம்பாடு ஏற்படும் என்று ஆசை காட்டப்பட்டது. நீரில் மூழ்கும் நிலையில் இருப்பவன் எந்தச் சிறிய துரும்பு கிடைத்தாலும் அதைப் பற்றிக்கொண்டு கரை ஏற முயல்வதைப்போல, இந்துக்களில் தாழ்த்தப்பட்ட பிரிவினர் மத மாற்றத் திற்குப் பலியானார்கள்.

குற்றம் யாருடையது? நம்முடையதுதானே. இதை ஒப்புக்கொள்ள நாம் வெட்கப்பட வேண்டியது இல்லை. செய்துவிட்ட தவறுகளுக்கு இந்துக்கள் பிரா யச்சித்தம் செய்துகொள்ள வேண்டிய கால கட்டம் இது.

நம் வேதங்களிலும் உபநிஷதங்களிலும் ஜாதி வேற்றுமைகளுக்கு ஆதாரம் இல்லை. இந்து சமூக அமைப்பின் சௌகரியம் கருதி இடைக்காலத்தில்

நுழைக்கப்பட்ட ஏற்பாடு இது. இது, நாளடைவில் தன்னுடைய தேவையை இழந்துபோய், இந்து சமூகத்தின் சாபக் கேடாக மாறிவிட்டது.

இந்த மத மாற்றங்கள் இன்றைக்குத் தீவிரம் அடைந்து வகுப்புக் கலவரங்களாகிச் சமூக அமைதியைச் சீர் குலைத்துக்கொண்டிருக்கின்றன.

நம் நாட்டில் தோன்றியுள்ள இந்த நிலைமைக்கு அரசியல்வாதிகளால் ஒருபோதும் தீர்வு காண முடியாது. காரணம், இன்றுள்ள அரசியல் தலைவர்கள் இந்தப் பிரச்சினைகளைத் தங்களுக்கு ஓட்டு பெற்றுத் தரும் உபாயங்களாகப் பயன்படுத்திக்கொள்ள முயல்கிறார்களே தவிர, நிலையான தீர்வு காண்பதில் அக்கறை செலுத்துவதில்லை.

ஜாதி அடிப்படையில் அரசியல்வாதிகளுக்கு ஓட்டு தேவைப்படுகிறது. குறிப்பிட்ட ஜாதியார் பெருவாரியாக உள்ள தொகுதிகளில், அந்த ஜாதி வேட்பாளர்களை நிறுத்தினால், ஜாதி ஓட்டுகளைப் பெற்று வெற்றி வாய்ப்பைப் பெற முடியும் என்று நம்புகிறார்கள். இதனால் ஜாதி உணர்ச்சியைப் பாதுகாத்து, மேன்மேலும் அதற்குத் தூபமிட்டு வளர்க்கும் உணர்ச்சியில் அரசியல்வாதிகள் ஈடுபடுகிறார்கள்.

இன்றைய காலகட்டத்தில், இந்து மதத்தில் நிலவி வரும் ஜாதி வேற்றுமைகளுக்கு இந்து மதம் காரணமல்ல; அரசியல் வாதிகளே பொறுப்பாகிறார்கள். அப்படியானால் இந்து மதத்திலிருந்து இந்தத் தீமையை எவ்வாறு களைவது என்கிற கேள்வி தானாகவே எழுகிறது.

மத அமைப்பின் அங்கமாக ஜாதிகள் விளங்குவதால், வேத சாஸ்திரப்படி ஜாதிகளுக்கு இந்து சமயத்தின் அங்கீகாரம் இல்லை என இந்து மதத் தலைவர்கள் அனைவரும் ஒருமுகமாகவும் மக்கள் உணரும் வகையிலும் பிரகடனம் செய்வது, ஜாதிகளைப் பொறுத்தவரையில் இந்து மதத்தின் நிலை என்ன என்பதைத் தெளிவுபடுத்துவதற்குப் போதுமானது.

ஆனால், இதுமட்டுமே பிரச்சினைக்குத் தீர்வாகிவிடாது. இந்து மதத் தலைவர்கள் ஜாதிச் சங்கங்களை அடியோடு பகிஷ்கரிக்க முன்வர வேண்டும். அதுபோலவே இந்து மதச் சடங்குகளில், தகுதியிருந்தால், ஜாதி வேற்றுமை இன்றி அனைவரும் ஈடுபடலாம் என்கிற அங்கீகாரத்தை மதத்தலைவர்கள் அளிக்க முன்வர வேண்டும்.

மகாத்மா காந்தி போன்ற ஆன்மிகப் பெரியவர்கள் தீண்டாமையை இந்து மதத்தின் சாபக்கேடு என்று திரும்பத் திரும்ப வலியுறுத்திச் சொன்னார்கள். யாரை நாம் தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கி வைத்தோமோ அவர்களே, இந்து மதத்திலிருந்து பிற மதங்களுக்கு மத மாற்றம் அடைகிறார்கள் என்பதைப் புள்ளி விவரக்கணக்குகள் சந்தேகத்திற்கு இடமின்றித் தெளிவுபடுத்துகின்றன.

தீண்டத்தகாதவர்கள் என்று இந்து மதத்தின் கணிசமான பகுதியினரை இந்துக்கள் ஒதுக்கிவைத்து விட்டு, அவர்கள் மதம் மாறுகிறார்களே என்று அங்கலாய்ப்பதில் அர்த்தம் இல்லை. ஒதுக்கப்பட்ட சேரிகள் இருக்கும் வரை இந்து மதத்திலிருந்து பலரும் தொடர்ந்து மதம் மாறிக்கொண்டிருப்பதை எவராலும் தடுக்க முடியாது.

வேடன் கண்ணப்பன் மோட்சம் பெற்ருன் என்றும், புலையன் நந்தன் நடராஜப்பெருமானைத் தரிசிக்க நந்தி வழி விட்டு விலகியது என்றும், திருப்பாணரைத் திருமால் தம் அடியவராக ஏற்றுக்கொண்டார் என்றும் கதைகளைச் சொல்லிவிட்டு, இந்தக் குலங்களைச் சேர்ந்தவர்களைத் தீண்டத்தகாதவர்களாக ஒதுக்கி வைப்பது, இந்து மதத்தில் காணப்படும் மிகப்பெரிய மோசடி ஆகும்.

இக்கதைகளைப் பக்தி ரசம் ததும்பப் புராணிகர்கள் எடுத்துச் சொல்லுகிருர்கள். ஆனல், இந்தக் கதைகள் உணர்த்தும் நீதியை வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தைப்பற்றிப் பொறுப்புள்ள இந்து மதத் தலைவர்கள் அக்கறை காட்டவில்லை என்று சொன்னல் இதைவிடப் பெரிய கேலிக்கூத்து வேறு ஏதாவது இருக்க முடியுமா?

நந்தனின் பெருமையினையும் கண்ணப்பரின் சிறப்பினையும், திருப்பாணுழ்வாரின் உயர்ந்த பக்தியினையும் போற்றிய இந்து மதத்திற்கு இன்றைக்கு இவ்வளவு மோசமான சரிவு ஏன் ஏற்பட்டது என இந்து மதத்தில் அக்கறை உள்ளவர்கள் சிந்திக்க வேண்டாமா?

உன்னதமான ஒரு மதத்தை—அறிவுப்பூர்வமாக உருப்பெற்ற ஒரு மதத்தை—சிந்தித்துச் செயல்படு என்று சொன்ன மதத்தை, அரை வேக்காட்டு மதவாதிகள் கொச்சைப்படுத்தியதன் விளைவை இன்றைக்கு நாம் அனுபவித்துக்கொண்டிருக்கிறேம்.

இந்து மதம் வெறும் சடங்குகளால் ஆன மதம் என எண்ணுவது மௌடீகத்தின் அடையாளம். சடங்குகள் இந்து மதத்தின் ஓர் அங்கமே தவிர, சடங்குகளே இந்து மதம் அல்ல. ஆங்கிலத்தில் (Theology)

என்று சொல்லுவார்கள். அதாவது, ஒவ்வொரு மதத்துக்கும் ஏதோ ஒரு வகையான விஞ்ஞானப் பூர்வமான அடிப்படை இருக்கும். இதைத்தான் ஆங்கிலத்தில் (Theology) என்று சொல்லுவது வழக்கம். வேறு எந்த மதத்தையும்விட இந்து மதத்திற்கு விரிவான தெளிவான (Theology) உண்டு. ஆனால், எனக்குத் தெரிந்த வரையில் காஞ்சிப் பெரியவர் ஒருவர்தான் எளிய முறையில் அதை மக்களுக்கு எடுத்துச் சொல்லும் முயற்சியில் ஈடுபட்டவர் ஆவார்.

இராமகிருஷ்ண பரமஹம்சரின் உபதேசங்களும், விவேகானந்தரின் சொற்பொழிவுகளும் வேறு ஒரு கோணத்திலிருந்து இந்து மதத்தின் Theology-யைத் தெளிவுபடுத்துகின்றன. இந்து மதப் பிரசங்கிகள் சுவை கருதி, புராண இதிகாசங்களைக் கதா காலட்சேப வடிவில் மக்களுக்கு எடுத்துச் சொல்லும் காரியத்தில் ஈடுபட்டார்கள். அவ்வாறல்லாமல், இந்து மதத்தின் விஞ்ஞானப் பூர்வமான அடிப்படைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லுவதில் அக்கறை காட்டியவர்கள் மிகச்சிலரே.

இதன் விளைவாக இந்து மதம் கண்மூடித்தனமான பழக்கவழக்கங்களையும் இறுக்கமான சடங்குகளையும் கொண்ட மதம் என்கிற தவறான கருத்து மக்களிடையே நிலவத் தொடங்கிற்று. இந்து மதத்தைச் சார்ந்தவர்களின் இந்தப் பலவீனத்தை இந்து மதத்தின் பலவீனமாகச் சித்திரித்து, 'பகுத்தறிவுவாதிகள்' என்கிற பெயரில் ஒரு சாரார், இந்து மதத்தைக் கண்மூடித்தனமாக எதிர்ப்பதையே மிகவும் முற்போக்கான விஷயம் போலக் காட்டும் முயற்சியில் ஈடுபட்டார்கள்.

ஆக, ஏனைய மதத்தினர் செய்ய முயலும் மதமாற்றம் ஒரு பக்கமும், பகுத்தறிவு என்னும் பெயரால் இந்து மதத்தின் விழுமிய ஏற்பாடுகளையும் கொச்சைப் படுத்தும் முயற்சி ஒரு பக்கமும் மேற்கொள்ளப் பட்டன.

ஆனால், இந்தப் போக்குகள் இந்து மதத்தின் விளிம்பைத்தான் தொட்டுச் சேதாரப்படுத்த முடிந்ததே தவிர இந்து மதத்தின் விஞ்ஞானப்பூர்வமான அஸ்திவாரத்தை அணுகக்கூட முடியவில்லை.

அப்படியானால், இந்து மதக் கோட்பாடுகளுக்குத் தம்மைக் காத்துக்கொள்ளும் ஜீவ சக்தி இருக்கும் போது, நாம் ஏன் கவலைப்பட வேண்டும் என்னும் மெத்தன உணர்ச்சி தோன்றுவதும் சரியல்ல.

ஏனெனில், இந்துக்களுக்குத் தங்கள் மதத்தின் அருமையும் பெருமையும் தெரியாமல் போய்விடுமானால், இந்து மதக் கருத்துகள் பலவீனப்படாமல் உறுதியாக இருந்தாலும், இந்த மதத்தைப் பின்பற்றுவோரின் எண்ணிக்கை குறைந்து போவதோடு, இந்து சமூகத்தின் செயலாற்றலும் நாளடைவில் க்ஷீணித்துப் போகும்.

இந்த நிலை ஒருபுறமிருக்க, வெளிநாடுகளில் இந்து மத எண்ணங்களைப் பரப்புவதாகச் சொல்லிக்கொண்டு போலிச் சாமியார்கள் பலர் வெளிநாட்டிலிருந்து பணத்தைப் பெற்றுக்கொண்டு, இந்து கலாச்சாரத்துக்கு முரண்பட்ட, ஊறு விளைவிக்கக்கூடிய காரியங்களில் ஈடுபடுவதையும் நம்மால் பார்க்க முடிகிறது.

இதுவும் நவீன காலத்தில் இந்து மதத்திற்கு ஏற்பட்டுள்ள கேடுகளுள் ஒன்றாகும்.

மொத்தத்தில் பார்க்கப்போனல், பல விதமான நெருக்கடிகளுக்கு ஆளாகிப்போயிருக்கும் மனித இனம் இந்து மத சித்தாந்தங்களில்தான் இந்த நெருக்கடி களைச் சமாளிப்பதற்கான திறவுகோல் இருப்பதாக எண்ணத் தொடங்கியிருக்கிறது. இது இந்து மதத் தின் ஆதாரபூர்வமான, விஞ்ஞான அடிப்படையில் நிருபணப்படுத்தும் வரலாற்றுச் சான்ருகும்.

ஆக, இன்றைய நிலையில் இந்துக்களாகிய நமக்கு மகத்தான சமூகக் கடமையும், அதைவிட மகத்தான மனித இனக் கடமையும் இருக்கிறது. இந்து மதத் தலைவர்களும் தாங்கள் பிறந்துவிட்டமதத்துக்குப் புண் ணிய வசத்தால் தாங்கள் தலைவர்கள் ஆகிவிட்டோம் என்று எண்ணுமல்,உலக அரங்கில் இந்து மதச் சிந்தனை கள் செயல்பட வேண்டிய சரித்திரக் கட்டாயம் ஏற்பட் டிருப்பதை உணர்வது அவசியம்.

இந்தப் பின்னணியில் ஒரு சராசரி இந்துவின் கடமைகள் என்ன என்று அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

# 28. என்ன செய்ய வேண்டும்?

இந்துக்களுக்கு ஒரு முக்கியமான கடமை இருக்கிறது. தாங்கள் சார்ந்துள்ள மதத்தின் அருமை பெருமைகளை முதலில் அவர்கள் உணர வேண்டும். தங்களை இந்துக்கள் என்று அழைத்துக்கொள்வதில் பெருமை அடைய வேண்டும்.

இந்துக்களிடம் தாழ்வு மனப்பான்மை தொற்று நோயைப்போல் பரவிக்கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம், தங்களுடைய மதத்தின் உயரிய - உன்னதமான சிந்தனைகளை அவர்கள் உணராது இருப்பது தான்.

இந்து மதத் தலைவர்களும் கடந்த காலத்தில் இந்துக்களிடம் தங்கள் மதத்தின்மீது நம்பிக்கை ஏற்படுத்தத் தவறிவிட்டார்கள். மதத் தலைவர்களுள் பெரும்பாலோர், ஏதோ அலுவலக காரியங்களைக் கவனிப்பதைப்போல மத நிர்வாக விஷயங்களைக் கவனித்து வந்திருக்கிறார்களே தவிர, மதச் செயல் முறையைச் சமுதாயத்தோடு தொடர்புகொண்ட ஒரு விஷயமாக எண்ணி அவர்கள் செயல்படத் தவறி விட்டார்கள்.

எனவே, இந்து மதத்தின் ஸ்தாபன ரீதியான அமைப்புகளுக்கும் இந்து சமுதாயத்துக்கும்

தொடர்பே இல்லாமல் போய்விட்டது. இந்துக்கள் நியாயமான உரிமைகளுக்குப் பாதகம் ஏற்பட்ட போதும்கூட, இந்துக்களின் சார்பாக வாதித்து நியாயம் கேட்கும் காரியத்தை மத நிறுவனங்கள் வேகத்தோடும் விறுவிறுப்போடும் மேற்கொள்ளத் தவறிவிட்டன.

கடந்த காலத்தோடு ஒப்பிடும்போது, இப்போது கொஞ்சம் விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருப்பதாகச் சொல்லலாம். நம் மதத்தின் சிறப்புகளை அறிய ஓர் ஆர்வம் இப்போது ஆங்காங்கே தோன்றி வருகிறது. இந்தச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு இந்து மதத்தின் சீரிய கோட்பாடுகளை விளக்கிச் சொல்லும் பொறுப்பை மத ஸ்தாபனங்கள் மட்டுமன்றி பொது மன்றங்களும் ஏற்றுக்கொள்ள முன்வர வேண்டும்.

நம் ஆலயங்கள் கலையழகுமிக்க புனிதமான இடங்கள். இந்த ஆலயங்களைத் தூய்மையோடு வைத்துப் பாதுகாக்க வேண்டும் என்கிற பொறுப்புணர்ச்சி இந்துக்களுக்கு வரவேண்டும். கோவில் நிர்வாகத்திடம் இந்தப் பொறுப்புகள் இருந்தாலும், வழிபாடு செய்கின்றவர்களும் அதில் தங்களுக்குள்ள பொறுப்பினைத் தட்டிக் கழித்துவிட முடியாது.

கோயில் புரோகிதர்களும் தாங்கள் ஒரு புனிதமான தெய்விகக் கடமையை மேற்கொண்டிருப்பதை உணர வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டும், எந்தச் சூழ்நிலையிலும் பக்தர்கள் மனம் புண்படும்படி அவர்கள் நடந்துகொள்ளக்கூடாது.

நம் புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவை பற்றிய விளக்கச் சொற்பொழிவுகள் தேவை என்றாலும்,

அவற்றை வெறும் பொழுது போக்கு என்னும் நிலைக்குத் தாழ்த்திவிடுகிற போது. அவற்றின் சரியான தெய்விகத்தன்மையை மக்கள் உணர முடியாமல்போய் விடுகிறது. இந்தக் கதைகளைவிட இந்து மதக் கோட் பாடுகளின் அடிப்படைகளை மக்கள் உணரும்படியாக எடுத்துச் சொல்லுவது அவசியம். இந்து மதத்தின் அடிப்படைகளைத் தெளிவாக உணர்ந்த தொண்டர் படை இந்து மதத்திற்குக் கிடைத்துவிடுமானுல், இந்து மதத்தின் சீரிய கருத்துகளை அவர்களைக் கொண்டு மக்களிடத்தில் சுலபமாகப் பரப்பிவிட முடியும்.

இந்து மதம் பற்றிய பயிற்சி வகுப்புகளை ஆங் காங்கே நடத்துவது அவசியம். இதில் ஜாதி பேதம் எதுவுமின்றி, ஹரிஜனங்கள் உட்பட அனைத்துத் தரப் பினரையும் சேர்த்துக்கொண்டு பயிற்சி அளிக்க வேண் டும். இதில் ஆர்வந்தான் முக்கியம். ஏனைய வேற்றுமை களைப்பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை.

இந்து மதத்தைச் சார்ந்த அனைவரும் ஒரு சமுதா யம் என்னும் உணர்ச்சி தோற்றுவிக்கப்பட வேண்டும். இந்த உணர்ச்சி தோன்றுவதற்கு எதுவும் தடையாக இருக்கக்கூடாது. இந்தக் கண்ணேட்டம் இந்துக்களி டையே தோன்ருத வரை இதற்கு ஏற்பட்டுள்ள சவால் களைச் சமாளிப்பதில் சிரமம் இருக்கவே செய்யும்.

எத்தனையோ நூற்ருண்டுகளாக இந்து சமயம் பேதப்பட்டு வந்திருக்கிறது. இந்த வேற்றுமைகள் சீக் கிரத்தில் மறைந்துவிடும் என்று எதிர்பார்க்கவும் முடி யாது. ஆனுல், முயற்சிகளைத் தொடர்ந்து மேற் கொள்ளுகின்ற போது, மெல்ல மெல்ல, ஆனுல் உறுதி

யாக, இந்து சமுதாயம் ஓர் அமைப்பாக உருப்பெறறு விடும் என்பது உறுதி.

இந்துக்கள் அனைவரும் இது பற்றித் தீர்க்கமாகச் சிந்திக்க வேண்டிய சரித்திரக் கட்டாயம் ஏற்பட்டிருப் பதைப் புறக்கணித்துவிட முடியாது.

# 29. ஒரு கண்ணோட்டம்

இந்தப் புத்தகத்தில் பல விஷயங்களை நான் சொல்லியிருக்கிறேன். வேத உபநிஷத காலத்திலிருந்து இன்றுவரை, இந்து மதத்தில் என்னென்ன போக்குகளை யார் யார் உருவாக்க முயன்றிருக்கிறார்கள் என்பதைச் சுட்டிக் காட்டியிருக்கிறேன்.

இந்து மதம் பரந்து விரிந்த மதம் என்றால், அதன் பரிணாம வளர்ச்சிக்குத் தொடர்பான அனைத்து விஷயங்களையும் சுட்டிக் காட்டுவது சாத்தியமில்லை. குறிப்பாக இந்தப் புத்தகத்தில் Mystics என்று ஆங்கிலத்தில் வழங்கப் படுகின்ற அதீத சக்தி படைத்த மகான்களை நான் தேர்ந்தெடுத்துக்கொண்டு அவர்கள் பற்றிய சில தகவல்களைக் கொடுத்திருக்கிறேன். பட்டியல் முழுமையானது அல்ல என்பதை நன்றாக உணர்ந்திருக்கிறேன். முழுமையான பட்டியலைக் கொடுப்பது சாத்தியமாகும் என்கிற சந்தேகமும் எனக்கு உண்டு. ஆகவே, இதில் ஏதாவது முக்கியமானவர்களின் பெயர்கள் விடப்பட்டுப் போயிருக்குமானால் அதை வாசகர்கள் பொருட்படுத்தக் கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

உதாரணமாக, இந்து மதச் சிந்தனைக்கு விரிவான விளக்கங்கள் கொடுத்த அரவிந்தர், இரமண மகரிஷி

கள், ஞானியார் ஸ்வாமிகள் போன்றவர்களைப்பற்றி நான் குறிப்பிடவில்லை. மகரிஷி ரவீந்திர நாத் தாகூர் போன்றவர்கள் இந்து மதச் சார்பில் எழுந்த இந்திய கலாச்சாரத்தை மேல் நாட்டவருக்கும் உணர்த்திய மகா புருஷர்கள் ஆவார்கள்.

இந்திய விடுதலை இயக்கத்துக்குக்கூட ஆன்மிகப் பரிமாணத்தைக் கொடுத்த பெருமைக்குரியவர், மகாத்மா காந்தி, துளசிதாசர், கபீர் தாஸ் போன்றவர்களின் பணிகளையும் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது. இந்திய மக்களின் அன்றாட வாழ்க்கையோடு இந்து மதம் இரண்டறக் கலந்துவிட்டது.

ஓர் இந்துவின் அன்றாட வாழ்க்கை நடவடிக்கைகள் அனைத்தும் அவனுடைய மத உணர்வின் பிரதிபலிப்பாகும் என்று, இந்து மதத்தைத் தெரிந்து கொள்ள முயன்ற மேல் நாட்டார் பலரும் ஒருமித்த கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள்.

இந்தப் பின்னணியை வைத்துக்கொண்டு நான் சிந்தித்தபோது, இந்து மதத்தை இந்தியாவுக்கு வெளியில் உள்ளவர்களும் புரிந்துகொள்ளும் வகையில் செயல்பட்ட சில பெரியார்களை மட்டும் தேர்ந்தெடுத்துக்கொண்டு அவர்களைப்பற்றிய குறிப்புகளைக் கொடுத்திருக்கிறேன்.

இந்த நூலில் இந்து மதத்தின் சரித்திர பூர்வமான வளர்ச்சியைச் சொல்லுவது என் நோக்கமல்ல. இதைச் சரியாகப் புரிந்துகொண்டால் மட்டுமே இந்த நூலில் சில விஷயங்களை நான் ஏன் சொல்லியிருக்கிறேன், வேறு சில விஷயங்களை நான் ஏன் விட்டிருக்கிறேன் என்பதும் தெளிவாகும்.

இந்து மதம் ஒரு பல்கலைக் கழகம். எத்தனையோ விதமான சிந்தனைகளுக்கும் இதில் இடமிருந்திருக்கிறது. இவற்றுள் எது சரி, எது தவறு அல்லது எது முக்கியமானது, எது முக்கியம் அல்லாதது என்கிற வாதத்திற்கு இடமில்லை.

பல்கலைக் கழக அமைப்பில் விஞ்ஞானமும் உண்டு, வரலாறும் உண்டு; கணிதமும் உண்டு, தத்துவமும் உண்டு; இன்னும் எத்தனையோ துறைகள் உண்டு. அது போன்றதுதான், இந்து மதமும். இங்கே பல்வேறு வகைச் சிந்தனை அமைப்புகள் உண்டு.

அனைத்துமே பிரபஞ்ச ரகசியத்தையும், வாழ்க்கை நோக்கையும் ஆராய்கின்றவை. இந்த ஆராய்ச்சிகள் ஒரு குறிப்பிட்ட நியதிக்குள்ளோ எல்லைக்குள்ளோ அடங்குவது சாத்தியமில்லை. அனைத்துச் சிந்தனைகளும் உண்மைகளைக் கண்டறிய முயல்கின்றன.

அறிவு எப்படி முடிவில்லாத தொடர்கதையாக இருக்கின்றதோ அது போலவே, இந்து மதச் சிந்தனைகளும் ஒரு தொடர்கதையாகத் தொடர நீண்டு கொண்டேயிருக்கும். புதுப்புது சிந்தனையாளர்கள் தோன்றிப் புதிய பரிமாணங்களை இந்து மதத்திற்குக் கொடுத்துக்கொண்டே இருப்பார்கள்.

அகரத்தை முதலாகக் கொண்டு எழுத்துகள் தொடங்குவதைப் போல வேத உபநிஷதங்களை ஆதாரமாகக்கொண்டு இந்து மதச் சிந்தனை தொடங்குகிறது.

இந்த ஆதாரங்களின் அடிப்படையில் தோன்றும் அனைத்துக் கருத்துகளுக்கும் இந்து மதத்தில் இடம் உண்டு.

இதுவே இந்து மதத்தின் பலம்; ஜீவசக்தி.

